சக்தி மலர்

லியோ டால்ஸ்டாய்

# இருளின் வலிமை

டால்ஸ்டாய் நாடகங்களுள் பெரும்புகழ் படைத்தது "இருளின் வலிமை" என்ற இந்த நாடகம். பல கேடுகள் ஒரு குடியானக் குடும்பத்தைப் படாதபாடு படுத்தி விடுகின்றன. ஆனால், இறுதியில் அன்பும் அருளும் அதனை ஒளிபெறச் செய்கின்றன. இதில் வரும் கோரக் காட்சிகள் பயங்கரமானவை,—கவர்ச்சி யானவை





# இருளின் வலிமை



ஆசிரியர் : லியோ டால்ஸ்டாய்

மொழிபெயர்ப்பு : நா. வானமாமலை, B.A.

சக்தி காரியாலயம்

மதுரை :: காரைக்குடி

## பதிப்புரை

அன்பு முறையானது எங்கும், எப்பொழுதும், எவரிடமும் வெல்லும் என்பதை "இருளின் வலிமை"யில் ருஷ்ய ஞானி டால்ஸ்டாய் தெளிவாய், வலுவாய்க் காட்டியுள்ளார். இது நாடக வகையிலேயே மிகச் சிறந்ததும், உயிர்த் துடிப்புள்ளதுமான சோக நாடக வகையைச் சேர்ந்தது. வஞ்சனை, கொலை, வன்கண்மை, விபசாரம் ஆகிய இருளின் வலிமை, ஒரு குடியானவக் குடும்பத்தைப் படாதபாடு படுத்தி விடுகிறது. ஆனால், கழிவிரக்கம், உண்மைப் பற்று, அன்பு ஆகியவை இருளை வலுவற்றதாக ஆக்கி ஒளியைப் பரப்புகின்றன.

நா. வானமாமலை அவர்கள் முதனூலின் நயமும், வேகமும் தமிழில் வர, எளிய, இனிய நடையில் மொழிபெயர்த்துள்ளார்.

சக்தி காரியாலயத்தார்

"உங்களுடைய இருளின் வலிமை என்ற நாடகத்திலே வரும் கிழப் போர்வீரன் (மிட்ரிக்) என் மனதைப் பெரிதும் கவர்ந்து விட்டான்; நாடக இலக்கியப் பரப்பு அனைத்திலுமே, என் உள்ளத்தை இவ்வளவு தூரம் கொள்ளை கொண்ட வேறொரு பாத்திரம் இல்லை யென்றே சொல்வேன். அந்த இரண்டு பயல்களும் மித மிஞ்சிக் குடித்து விட்டு, வைக்கோற் கட்டின்மேல் கிடந்து உதைத்துக் கொள்ளும் போது, நிகிதா தன் கோழைத்தனத்தையும் சுயநலத்தையும் அகற்றி விட்டு உன்னதமான மன நிலை பெறுவதற்கு, அந்தக் கிழவனுடைய சொற்கள் காரணமா யிருக்கின்றன வல்லவா? இந்தக் காட்சி என் உள்ளத்திலே தீவிரமானதொரு கிளர்ச்சியை யுண்டாக்கிற்று; வேறெந்த விசித்திரமான கற்பனைக் காட்சியாலும் எனக்கு இத்தகைய கிளர்ச்சி யுண்டாக முடியாது."

—பெர்னார்ட் ஷா

## நாடக உறுப்பினர்



| | |
|---|---|
| பீட்டர் : | நாற்பத்திரண்டு வயதான விவசாயி ; பணக்காரன் ; நோயாளி. |
| அநிஸ்யா : | அவன் மனைவி. இரண்டாந் தாரமாக வாழ்க்கைப் பட்டவள். வயது முப்பத்திரண்டு. |
| அகுலினா : | பீட்டருடைய முதல் தாரத்தின் பெண். பதினாறு வயது. கொஞ்சம் செவிடு. அறிவு கொஞ்சம் போதாது. |
| அன்னா : | பீட்டருக்கும் அநிஸ்யாவுக்கும் பிறந்த பெண். வயது பத்து. |
| நிகிதா : | அவர்களுடைய பண்ணையாள். இருபத்தைந்து வயது. உல்லாசப் பேர்வழி. |
| அகிம் : | நிகிதாவின் தந்தை. ஏழை. யோக்கியன். ஐம்பது வயது. |
| மாத்ரோனா : | நிகிதாவின் தாய். ஐம்பது வயது. |
| மரீனா : | ஓர் அனாதைப் பெண். இருபத்திரண்டு வயது. |

**மார்த்தா :** பீட்டருடைய சகோதரி.

**மிட்ரிக் :** வயதான வேலையாள் ; இளமையிலே போர்வீரனு யிருந்தவன்.

**ஸைமன் :** மரீனுவின் கணவன்.

**மணமகன் :** அகுலினுவுக்கு நிச்சயம் செய்யப்பட்டவன்.

**இவான் :** மணமகனின் தகப்பன்.

**[பக்கத்து வீட்டுக்காரி, சில பெண்கள், போலீஸ் அதிகாரி, வண்டியோட்டி, மணத்தரகன், நாட்டாண்மைக்காரர், விருந்தினர் முதலியோர்.]**

---

# இருளின் வலிமை

## முதல் அங்கம்

[இலையுதிர்காலம். ஒரு பெரிய ருஷியக் கிராமம். பீட்டருடைய விசாலமான குடிசையில் காட்சி ஆரம்பிக்கிறது. பீட்டர், கட்டிலின்மீது உட்கார்ந்து, குதிரைக் கடிவாளமொன்றைப் பழுது பார்த்துக்கொண்டிருக்கிறான். அநிஸ்யாவும் அகுலினாவும் பாடிக்கொண்டே நூல் நூற்கிறார்கள்.]

*பீட்டர்* : [ஜன்னல்வழியாக வெளியே பார்த்து :] மறுபடியும் குதிரைகள் அவிழ்த்துக்கொண்டு விட்டன. அவைகளை நேரே பார்த்துக்கொள்ளா விட்டால், குதிரைக் குட்டியின் உயிருக்கு மோசம். நிகிதா! அடே நிகிதா! அந்தப் பயலுக்குக் காது செவிடா என்ன? [பெண்களை நோக்கி :] போதும் உங்கள் பாட்டு! வெளியே நடக்கிறது காதில் விழாத படி ஊளையிடுகிறீர்களே!

*நிகிதா :* [வெளியிலிருந்தபடியே :] என்ன !

*பீட்டர் :* குதிரைகளை உள்ளே துரத்து.

*நிகிதா :* அப்படியே. கொஞ்சநேரம் போகட்டும்.

*பீட்டர் :* [*தலையை அசைத்து :*] அப்பா ! இந்தப் பண்ணையாள்களோடு நான் படுகிறபாடு !... உடம்பு மட்டும் சரியாயிருந்தால், ஒரு பயலைக்கூட என் வீட்டருகில் வரவிடமாட்டேன். ஓயாத தொல்லை அவர்களோடு ! [எழுந்து, மறுபடியும் 'தொப்' பென்று உட்காருகிறான்.] நிகிதா !.........தொண்டை கிழியக் கத்தி என்ன உபயோகம் ? [பெண்ணைப் பார்த்து :] அகுலினா ! நீ போய், குதிரைகளை உள்ளே அடித்து விட்டு வா, அம்மா !

*அகுலினா :* குதிரையையா, அப்பா ?

*பீட்டர் :* ஆமாம் ! வேறு என்னத்தை ?

*அகுலினா :* சரி. [வெளியே போகிறாள்.]

*பீட்டர் :* அந்தப் பயல் ஊர் சுற்றத்தான் லாயக்கு. பைசாவுக்குப் பிரயோசனமில்லை. கொஞ்சம் அப்புறம் நகர்வதற்குக்கூட யோசனை செய்கிறான்.

*அநிஸ்யா :* போதும், போதும் ! உங்கள் சுறுசுறுப்பு யாருக்கு வரும் ? கணப்போரத்திலே காலை நீட்டிப் படுத்துக்கொண்டிருக்கிற நேரம் போகப் பாக்கி நேரமெல்லாம் கட்டிலைவிட்டு நீங்கள் நகருகிறதேயில்லை. 'வேலை செய், வேலை செய்' என்று மற்றவர்களைச் சொல்வதைத் தவிர, வேறு என்ன

தான் உருப்படியான வேலை செய்கிறீர்கள்? நானும் சொல்லாவிட்டால், அப்புறம் கேட்கவே வேண்டாம்.

*பீட்டர் :* குடியிருக்கிற வீட்டுக்குக் கூரைகூட வேயமாட்டான். சோம்பேறி, முழுச் சோம்பேறி!

*அநிஸ்யா :* கணக்கில்லாமல் எத்தனையோ வேலைகளை அவன் தலையில் சுமத்தினால் அவன்தான் என்ன செய்வான்? இப்படித் திட்டிக்கொண்டேயிருப்பதில் என்ன லாபம்?

*பீட்டர் :* எனக்குமட்டும் இந்த வியாதி இல்லாவிட்டால், ஒரு நிமிஷங்கூட அவனை இங்கே இருக்க விடமாட்டேன்.

[திரைக்குப் பின்னால், அகுலினா, குதிரைகளை அதட்டி ஓட்டும் சத்தம் கேட்கிறது. குதிரைக் குட்டியொன்று கனைக்கிறது. 'கிரீச்' என்று கதவு திறக்கிற ஓசையும், குதிரைகளின் குளம்பின் ஓசையும் கலந்து, இருவருக்கும் கேட்கிறது.]

*பீட்டர் :* கதையளப்பதில் கெட்டிக்காரன்! செவிட்டில் நாலு கொடுக்கவேணும் என்றுதான் தோன்றுகிறது எனக்கு.

*அநிஸ்யா :* [அவன் சொல்வதைக் கேலி செய்யும் பாவனையில் :] 'செவிட்டில் கொடுக்க வேணும்!' உங்கள் வேலையை ஒழுங்காகச் செய்யுங்கள். மற்றவர்களைப்பற்றிப் பிறகு பேசலாம்.

*அகுலினா :* [இங்கு வருகிறாள்.] எல்லாக் குதிரைகளையும் லாயத்துக்குள் அடைத்துவிட்டேன்.

பீட்டர்: நிகிதா எங்கே போனான்?

அகுலினா: அவன் தெருவிலே அரட்டையடித்துக் கொண்டிருக்கிறான்.

பீட்டர்: அங்கென்ன வேலை அவனுக்கு?

அகுலினா: யாரிடத்திலோ வளவள வென்று ஓயாமல் பேசிக்கொண்டிருக்கிறான்.

பீட்டர்: அப்படி என்னதான் பேசுவதற்கு இருக்குமோ, தெரியவில்லை.

அகுலினா: [பீட்டர் சொன்னது தனக்குக் கேட்கவில்லை என்பதற் கடையாளமாக, முகத்தைச் சுளித்துக்கொண்டு :] உம்...என்ன?

[பீட்டர் கொஞ்சம் சலிப்புடன், விலகி நிற்குமாறு அவளுக்குச் சைகை செய்கிறான். அவள், தான் முன்னிருந்த இடத்துக்குப் போய், நூல் நூற்கத் தொடங்குகிறாள். அன்னா, ஓடி வந்து, தாயண்டை நின்றுகொண்டு, பேச ஆரம்பிக்கிறாள்.]

அன்னா: நிகிதாவின் அப்பாவும் அம்மாவும் வந்திருக்கிறார்கள். நிஜமாகவே அவனை அழைத்துக் கொண்டு போகப் போகிறார்க்ளாம்!

அநிஸ்யா: சீ! முட்டாள், பேசாதிரு.

அன்னா: நீதான் பாரேன்! [எதையோ நினைத்துச் சிரிக்கிறாள்.] நான் அவன் நின்ற பக்கமாய்ப் போனேன். "போய் வருகிறேன், அன்னா! என்

கலியாணத்தில் விருந்து நடக்கும். அந்த விருந்துக்கும் நடனத்துக்கும் வரத் தவருதே. போய் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சிரித்தான் அவன்.

*அநிஸ்யா :* உங்கள் பண்ணையிலிருக்க அவனுக்கே பிடிக்கவில்லை. பார்த்தீர்களா! 'செவிட்டிலே கொடுக்க வேணும்' என்று கரித்தீர்களே! இனிமேல் பண்ணை வேலையை யார் பார்த்துக்கொள்வது?

*பீட்டர் :* தொலைந்து போகட்டுமே! இவன் போய்விட்டால், அப்புறம் வேறு பண்ணையாளே எனக்குக் கிடைக்கமாட்டான்!

*அநிஸ்யா :* அதுசரி. நம்மிடமிருந்து முன் பணம் வாங்கியிருக்கிருனே! அது என்ன ஆவது?

[அன்னு, கதவண்டை நின்று பேச்சைக் கவனித்துக் கொண்டிருந்தவள், சட்டென்று வெளியே போகிருள்.]

*பீட்டர் :* [முகம் கடுக்க :] பணமா? கோடையில் நமது பண்ணையிலே வேலை செய்து பணத்துக்குச் சரிக்கட்ட வேண்டியதுதான்.

*அநிஸ்யா :* உங்கள் சோற்றுக்குக் கேடில்லாமல் காரியத்தை நடத்துங்கள்! அவன் போய்விட்டால் உங்களுக்கென்ன கவலை? நான்தான் மாடு போல் பனிக்காலம் முழுவதும் உழைக்க வேணும். உங்கள் பெண்ணொருத்தி யிருக்கிருளே, குதிரைக்குட்டி மாதிரி, அவளுக்கு, வேலை என்ருலே கசக்கும். நீங்களோ, கணப்பை விட்டு நகரமாட்டீர்கள்.

*பீட்டர் :* போதும், நிறுத்து.

அநிஸ்யா: கொட்டில் நிறைய மாடும் கன்றுமா யிருக்கிறது. ஆடுமாடுகளை யெல்லாம் விற்றுத் தொலைத்து விட்டாலும், அலுப்பற்று உறங்கலாம். அதை யெல்லாம் குளிப்பாட்டித் தீனிபோட்டுக் கவனிப்பதற்கே இரண்டு மூன்று ஆள் வேண்டுமே! நீங்களோ, பண்ணையாளைச் 'செவிட்டிலே நாலு கொடுத்து அனுப்பிவிட வேணும்' என்கிறீர்கள். இப்பொழுதே சொல்லி விடுகிறேன்: ஆண் பிள்ளை யொருவன் செய்யவேண்டிய வேலையெல்லாம் என்னுல் செய்யமுடியாது. உங்களைப் போலவே நானும் காலை நீட்டிப் படுத்துக் கொள்ளப் போகிறேன். எது எப்படிப் போனுல் எனக்கென்ன? நீங்கள் என்ன வேண்டுமானுலும் செய்து கொள்ளுங்கள்.

பீட்டர்: [அகுலினுவைப் பார்த்து:] குதிரை களுக்குத் தீனிவைக்க நேரமாயிற்று. நீ போய் அதைக் கவனி அம்மா!

அகுலினு: உம்! [ஒரு கயிற்றைக் கையிலெடுத்துக்கொண்டு வெளியே கிளம்புகிருள்.]

அநிஸ்யா: நான் இனிமேல் எங்கும் நகரமாட்டேன். எல்லாப் பண்ணை வேலைகளையும் நீங்களே கவனித்துக்கொள்ள வேண்டும். போதும், போதும், உங்களுக்கு நான் உழைத்து உழைத்துக் கண்டது!

பீட்டர்: அப்பப்பா! எத்தனை நாள் இந்த வேதனையைப் பொறுத்துக் கொள்வது? வாயை மூடிக் கொண்டு கொஞ்சம் சும்மா கிட!

அநிஸ்யா: உங்களால் எனக்கு லாபமுமில்லை, சுகமுமில்லை. மூக்கு முட்டச் சாப்பிடுகிறீர்கள்,

கணப்போரத்திலே சோம்பிக் கிடக்கிறீர்கள். வேறென்ன நீங்கள் செய்கிறீர்கள்?

பீட்டர்: [இருமிக்கொண்டே எழுந்திருக்கிறுன்.] கடவுள்தான் துணை. நானே போய் எல்லாவற்றையும் கவனிக்காவிட்டால், வயலும், மாடும், கன்றும் எல்லாம் அதோ கதிதான்! [வெளியே போகிறுன்.]

அநிஸ்யா: [அவன் போன பின்பு:] நோய் பிடித்த பிணம், சனியன்.

அகுலிஞ: எதற்காக அவரைத் திட்டுகிருய்?

அநிஸ்யா: அட மூதேவி! வாயை மூடு.

அகுலிஞ: [கதவுப் பக்கம் போகிருள்.] நீ அவரைத் திட்டினது எனக்குத் தெரியும். நீயும் ஒரு மூதேவிதான். உனக்கு நான் பயப்பட்ட காலமெல்லாம் மலையேறிவிட்டது.

அநிஸ்யா: என்ன சொன்னுய்? [குதித்தெழுந்து, அகுலிஞமீது எறிய ஏதாவது அகப்படுமா என்று தேடுகிருள்.] மரியாதையாய்ப் பேசு. இல்லாவிட்டால்...அதோ, அடுப்பில் சூட்டுக்கோல் இருக்கிறது, பார்த்துக்கொள்.

அகுலிஞ: [கதவைத் திறந்துகொண்டு:] நாயாம், பேயாம்! நீதான் நாயும் பேயும்.

[ஓடிப்போய் விடுகிருள். நிகிதா உள்ளே வருகிருன். அநிஸ்யா தனியாயிருப்பதைக் கண்டதும், விரைவாக அவளருகில் வந்து நின்றுகொண்டு, மெதுவான குரலில் பேசுகிருன்.]

அநிஸ்யா: [தனக்குள்:] 'என் கலியாணத்தில் வந்து நீ ஆடவேண்டும்' என்று அவன் சொன்னனுமே! இதென்ன புது ஏற்பாடு? கலியாணமா? நிகிதா மாத்திரம் கலியாணம் பண்ணிக்கொள்வதாயிருந்தால்......! சே, அவனில்லாமல் நான் என்ன செய்வது? எப்படி வாழ்வது? கலியாணம் பண்ணிக் கொள்ள நான் விடுவேனு என்ன?

நிகிதா: என்ன செய்வதென்று தெரியவில்லை. எங்கள் அப்பா வந்திருக்கிருர். தன்னேடு வந்துவிட வேண்டு மென்கிருர். அதோடு நில்லாமல், சீக்கிரம் கலியாணம் பண்ணிக்கொண்டு வீட்டோடு இருக்க வேண்டுமென்றும் சொல்லுகிருர்.

அநிஸ்யா: அதற்கென்ன, போயேன். யாரை யாவது கட்டிக்கொள்ளேன். எனக்கென்ன வந்தது?

நிகிதா: அப்படியா? எப்படி இந்தத் தொந்தரவி லிருந்து தப்பலாம் என்று யோசனை பண்ணிக்கொண் டிருக்கிறேன். நீயோ, 'போ, யாரையாவது கட்டி யழு, எனக்கென்ன?' என்கிருய். இதற்கென்ன காரணம்? [கண்ணைச் சிமிட்டிக் கொண்டு:] இவளுக்கு எல்லாம் மறந்து போயிருக்குமா?

அநிஸ்யா: ஆமாம், மறுபடியும் சொல்லு கிறேன். யாரையாவது கட்டிக்கொள். எனக் கென்ன?

நிகிதா: முகத்தில் காறி உமிழ்வது போல என் சள்ளென்று விழுகிருய்? இதோ பார். உன் கையைத் தொடுவதற்குக் கூட நான் அருகனில்லையா? இன்று நீ செய்கிறது ஒன்றும் எனக்குப் புரியவில்லையே!

*அநிஸ்யா :* உனக்கு எப்படிப் புரியும்? நீ பெரிய வேஷதாரி. சில நாட்களுக்கு முன் என்னிடம் எத்தனை பாசாங்கு பண்ணினாய்? இப்பொழுது திடீரென்று, 'போய் வருகிறேன்' என்கிறாய். சரி, போய் வா. எனக்கென்ன வந்தது?

*நிகிதா :* போதும், அநிஸ்யா! உன்னை மறந்து விடுவேன் என்று எண்ணுகிறாய்? உயிருள்ள வரையில் மறக்கமாட்டேன். வலுக்கட்டாயமாக என்னைக் கொண்டுபோய், என் சம்மதியில்லாமல் எனக்கு மணம் செய்து வைத்தாலும், திரும்பவும் இங்கே ஓடிவந்து விடுவேன். அதுதான் என் உள் எண்ணம். இவற்றையெல்லாம் நீ எப்படி அறிவாய், அநிஸ்யா? ஆனால், ஒன்று : என் தகப்பனார் மட்டும் நான் தம்மோடு தம் வீட்டிலேயே வாழவேண்டும் என்று என்னைக் கட்டாயப்படுத்தினால், தொந்தரவுதான்.

*அநிஸ்யா :* ஆமாம்! உனக்குக் கலியாணமானால் அப்புறம் இங்கு என்ன வேலை?

*நிகிதா :* எனக்கு ஒரே குழப்பமா யிருக்கிறது. என் தகப்பனார் கட்டளைக்கு விரோதமாக நான் எப்படி நடக்க முடியும்? அப்புறம் என் கதி?

*அநிஸ்யா :* ஆமாம், உன் குற்றத்தை யெல்லாம், பாவம், உன் அப்பா தலையில் போடு. நீ மிகவும் நல்லவன் போலப் பேசிக்கொள்கிறாயே? கேடு கெட்ட அந்த மரீனா இருக்கிறாளே, அவளோடு நீ செய்த சதியெல்லாம் எனக்குத் தெரியாதா? அவள் தான் உன் மூளையைக் கலைத்துவிட்டாள். அன்றைக்கு இங்கு வந்தாளே; காரியமில்லாமலா வந்திருப்பாள்!

நிகிதா: மரீனுவா? என்னைப் பார்க்க அவள் ஏன் வருகிருள்? அவள் எக்கேடு கெட்டால் எனக் கென்ன? எத்தனையோ பேர் வலை வீசுகிருர்கள். அதற்கு நானு பழி?

அநிஸ்யா: உங்கள் அப்பா இங்கு வந்ததற்குக் காரணம் என்ன? நீதான் அவரிடம் போய்ச்சொல்லி அழைத்துப் போகச் சொல்லியிருக்கிருய். உன் கெஞ்சல்க ளெல்லாம் வெறும் பாசாங்கு தானே! (தேம்பி அழத் தொடங்குகிருள்.)

நிகிதா: அநிஸ்யா! நீ சொல்கிறதுபோலச் செய்யவேண்டுமென்று கனவிலேகூட நான் நினைத்த தில்லை. ஆமாம்! கனவிலேகூட நினைத்ததில்லை. இது உண்மை. இதற்கெல்லாம் காரணம், எங்கப்பா யோசனைதான்.

அநிஸ்யா: கலியாணம் வேண்டாமென்று நீ சொல்லிவிட்டால், அப்புறம், உன்னையும் மீறி உன் கழுத்தில் ஒருத்தியை யார்தான் கட்டமுடியும்? மிரு கத்தைத்தான் அடிக்கலாம், துரத்தலாம். மனிதனையும் அந்த மாதிரி ஒரு காரியத்தைச் செய்யும்படி நிர்ப்பந் திக்க முடியுமா?

நிகிதா: தாய் தகப்பன் சொல்வதற் கெதிராக ஒருவன் நடக்க முடியுமா? என்னுடைய விருப்பம் அதுவல்ல.

அநிஸ்யா: உன் தீர்மானத்தினின்றும் வழு வாதே. உறுதியாயிரு.

நிகிதா: இப்படித்தான் ஒருவன், தன் தகப்பனர் குறிப்பிட்ட பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள

மறுத்தான். நாட்டாண்மைக்காரர் அவனைக் கூப்பிட்டு, சரியான பூசை கொடுத்தனுப்பினர்............ எனக்கும் அது கிடைக்குமோ என்றுதான் பயமாயிருக்கிறது.

அநிஸ்யா: போதும் உன் கதை யெல்லாம்! கிகிதா, நான் சொல்வதைக் கேள்: அந்த மரீனுவைக் கலியாணம் செய்து கொண்டாயோ, என் உயிரை மாய்த்துக் கொள்வேன். நான் பாவி. உண்மைதான். சமூகக் கட்டுப்பாட்டை மீறிவிட்டேன். ஆனல், இனிமேல் மாறுவது இயலாது. நீ என்னைவிட்டு ஓடி விட்டால், அப்புறம், நான்...........நான்...........?

நிகிதா: நான் ஏன் ஓடிப்போக வேண்டும்? எனக்கு மட்டும் அந்த எண்ணமிருந்தால் முன்னமேயே உன்னை விட்டுப் போயிருப்பேனே! அன்றைக்கொரு நாள், இவான் ஸெமனிக் என்னை வண்டியோட்டுகிற வேலைக்கு வரச் சொன்னர். எவ்வளவோ சௌகரியமான வேலை. ஆனல், நான் போகவில்லை. ஏன்! என் அன்பு காரணமாக, நானும் தியாகம் செய்ய முடியாதா என்ன? என்னிடத்தில் நீ அன்பு பாராட்டவில்லை யென்ருல், அன்றே அந்த வேலைக்குப் போயிருப்பேன்.

அநிஸ்யா: ஆம். அதைத்தான் நீ நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்தக் கிழம் சீக்கிரத்தில் தீர்ந்துபோய்விடும். பிறகு நமது பாவத்துக்குப் பிராயச்சித்தம் வேண்டாமா? அதற்காகச் சட்டபூர்வமாகவே கலியாணம் பண்ணிக் கொள்ளலாம். அதற்கப்புறம் நீதான் இங்கே எஜமான்.

நிகிதா: மனக்கோட்டை கட்டுவதில் என்ன உபயோகம்? இப்போது எனக்கு என்ன குறை? என் சொந்த வேலையைக் கவனிக்கிறது மாதிரி, எவ்வளவு ரொம்ப அக்கரையோடுதான் உங்கள் பண்ணை வேலையையும் நான் பார்த்துக்கொள்ளுகிறேன். என் எஜமான் என்னிடத்தில் ரொம்பப் பிரியத்தோடுதானிருக்கிருர். எஜமானியம்மாவும் அப்படியே. ஊரிலுள்ள பெண்கள் என்மீது ஒரு கண் வைத்திருந்தால், அதற்கு நானென்ன பண்ணுவது?

அநிஸ்யா: நீ என்னைக் கைவிட மாட்டாயே?

நிகிதா: [அவளைத் தழுவிக்கொண்டே:] நீ எப்போதும் என் இதயத்தில் வாழ்கிருய்................!

[மாத்ரோனு வருகிருள். அறையின் நடுவிலுள்ள கிறிஸ்து சிலையின் முன்னே நின்று நெடுநேரம் வணங்குகிருள். நிகிதாவும் அநிஸ்யாவும் திகைத்துப் பிரிந்து நிற்கிருர்கள்.]

மாத்ரோனு: நான் கண்டது எனக்கு விளங்கவில்லை. காதில் விழுந்த வார்த்தைகளையும் கவனித்துக் கேட்கவில்லை. நிகிதா, அவளோடு விளையாடிக் கொண்டிருந்தாயா? கன்றுக்குட்டி கூட துள்ளி விளையாட விரும்புகிறது. இளமையிலே விளையாடாமல் பின் எப்போதுதான் விளையாடுகிறது! உன்னை எஜமானர் தோட்டத்திலிருந்து உரத்துக் கூப்பிடுகிருரே, உனக்குக் காது கேட்கவில்லையா?

நிகிதா: ஒரு கோடாலி எடுக்கத்தான் இங்கு வந்தேன்.

மாத்ரோனு: தெரியுமப்பா, நிகிதா. அநிஸ்யா இருக்கும் இடத்தில்தான் கோடாலி யிருக்கிறதோ?

நிகிதா: [கீழே கிடக்கும் கோடரியை எடுக்கக் குனிந்த வண்ணமாக:] அம்மா! நான் கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று உண்மையாகவே நீ விரும்புகிருயா? எனக்கு அதெல்லாம் அனுவசியமாகத் தோன்றுகிறது. தவிரவும், எனக்கு அந்த ஆசையே இல்லை.

மாத்ரோனு: நீ ஏன் கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டும்? அதெல்லாம் உங்கப்பா யுக்தி. நீ இப்படியே காலங்கழிக்கலாம். உன்னை எஜமானர் கூப்பிடுகிருர். போ. நீ இல்லாமலேயே இந்த விஷயத்தைப்பற்றி அவளிடம் பேசி முடித்துவிடுகிறேன்.

நிகிதா: ஒரு சமயம் கலியாணம் பண்ணிக் கொண்டால்தான் ஆச்சு என்கிறீர்கள். அடுத்த நிமிஷம், அதெல்லாம் இப்பொழுது எதற்கு என்கிருய். நீ சொல்வதொன்றும் எனக்கு விளங்கவில்லை.

[வெளியே போகிருன்.]

அநிஸ்யா: என்ன விசேஷம், மாத்ரோனும்மா, உங்கள் பிள்ளைக்குச் சீக்கிரம் கலியாணம் ஆகணும் என்று நினைக்கிறீர்களா?

மாத்ரோனு: என் கண்ணே, இப்போது அவன் ஏன் அவசர அவசரமாகக் கலியாணம் பண்ணிக் கொள்ளணும்? அப்படிச் செய்வது மடத்தனம் இல்லையா? அதெல்லாம் இந்தக் கிழவன் முணு முணுப்பு, "கலியாணம் பண்ணிக்கோ, கலியாணம் பண்ணிக்கோ" என்கிறது. வீடு நிரம்பக் கொள்ளும்

வைக்கோலும் இருக்கும்போது, குதிரை வயலிலே மேயுமா? வேண்டியதெல்லாம் இங்கே கிடைக்கிற போது, ஏன் அங்குமிங்கும் பார்க்க வேண்டும்? [கண் சிமிட்டுகிருள்.] எந்தக் காற்று எப்படி அடிக்கிற தென்று எனக்குத் தெரியாதா?

அநிஸ்யா: அம்மா, மாத்ரோனு! உங்களிடம் பொய்யாக நடிப்பதில் என்ன லாபம்? உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லே. நான் பாவி. உங்கள் மகன் மேலே எனக்கு ரொம்ப ஆசை.

மாத்ரோனு: எனக்குத்தான் தெரியுமே! தெரியா தென்று நினைத்தாய்? இந்த மாத்ரோனுவுக்கு எவ்வ ளவு உலக அனுபவம் உண்டு என்பதை நீ எப்படிக் கண்டாய்? இப்பொழுதாவது அறிந்துகொள். மாத்ரோனு, மூன்றடி கனமுள்ள சுவருக்கப்பாலிருந் தாலும், உள்ளே நடக்கிற விஷயங்களே அறிந்து கொள்ளும் சக்தி யுடையவள். எனக்கு எல்லாம் தெரியும், இளம்பெண்கள் எதற்காகத் தூக்க மருந்து வேண்டுகிருர்கள் என்பதும் எனக்குத் தெரியும்...இப் பொழுது, ஒருவேளேக்கு வேண்டிய மருந்து கொண்டு வந்திருக்கிறேன். [கைக் குட்டையிலுள்ள முடிச்சு ஒன்றை அவிழ்த்து, ஏதோ இரண்டு கடுதாசிப் பொட் டலங்களே எடுக்கிருள்.] எவ்வளவு தெரியவேண்டு மோ அவ்வளவுதான் என் கண்களில் படும். இதோ பார். உன்னேப் போலவே நானும் ஒரு காலத்தில் சிறு பெண்ணுயிருந்திருக்கிறேன். முட்டாள் கணவனேடு வாழ்ந்தபோது, சில விஷயங்களேக் கற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. இப்போது அவரை ஏமாற்ற நூற்றுக்கணக்கான ஜாலங்கள் எனக்குத்

தெரியும். உன் கணவன் எலும்பும் தோலுமா யிருக்கிறான். அவனைப்போன்ற ஒரு புருஷனோடு எப்படி ஒரு பெண் வாழமுடியும்? கத்தியால் குத்தினாலும் ஒரு சொட்டு ரத்தம் அவனுடம்பிலிருந்து வருமா? அடுத்த கோடை காலத்திற்குள் அவனுடைய காரியம் முடிய வேண்டும். அப்புறம், வீட்டில் யாராவது உனக்குத் துணை வேண்டாமா? என் பிள்ளைக்கு என்ன குறை? யாரையும்விட அவன் உழைப்பாளி. அப்படியிருக்க, அவனுக்கு மணமுடித்து வைத்தால் என்ன அதிகப்படி கிடைக்கப் போகிறது? நானே என் குழந்தைக்கு விரோதியாக இருப்பேனா?

*அநிஸ்யா:* அவன் போகாமல் இங்கேயே தங்கி விட்டால்......!

*மாத்ரோனா:* அவன் போகமாட்டான், கண்ணு! என் கிழவர் மூளை அவ்வளவு சரியில்லை. ஆனால், அவர் மூளையில் ஏதாவது தோன்றி விட்டால், அவ்வளவுதான். ஒரு சம்மட்டியைக் கொண்டு அடித்தாலும், அந்த விஷயம் அவர் மூளையிலிருந்து போகவே போகாது.

*அநிஸ்யா:* இந்த விஷயம் எப்படித் தொடங்கியது?

*மாத்ரோனா:* இவன் பார்ப்பதற்கு அழகா யிருக்கிறான். பெண் குட்டிகளுக்கு இதற்குமேல் என்ன வேண்டும்? இவன் ரயில்வேயிலே வேலை செய்தான் என்பது உனக்குத் தெரியும். அப்போது அங்குள்ள சிலருக்குச் சமையல் செய்து பிழைத்துக் கொண்டிருந்தாள், இந்த அனாதை மரீனா. நாளடைவில் அவளுக்கு இவன்மேல் மோகம் ஏற்பட்டது.

அநிஸ்யா : மரீனுவா ?

மாத்ரோனு : ஆமாம். அவளை மகாமாரி கொண்டு போக! என்ன நடந்ததோ, அதைப்பற்றி யாருக்கும் தெரியாது. என்னவோ இந்தக் கிழவர் காதுக்கு எட்டியிருக்கிறது. பக்கத்து வீட்டுக்காரர்கள் ஏதாவது சொன்னுர்களோ, அல்லது அவளேதான் ஏதாவது உளறினுளோ, அதுவும் எனக்குத் தெரியாது.

அநிஸ்யா : அவளுக்கு ரொம்பத் தைரியமுண்டு. ஊரெல்லாம் கலக்குவாளே !

மாத்ரோனு : அதனுலே, கிழவர் "கலியாணம் பண்ணிக்கோ அவளை ; நீ பண்ணின பாபத்துக்குப் பரிகாரம் அதுதான். நீ வீட்டோடு வந்துவிடு" என்று அவனைக் கட்டுப்பாடு பண்ண ஆரம்பித்துவிட்டார். அவர் மனத்தை மாற்ற எனக்குத் தெரிந்ததெல்லாம் செய்து பார்த்தேன். வேறு வழியில்லை. ஏமாற்றினுல்தான் காரியம் முடியும் என்ற முடிவுக்கு வந்தேன். இந்த முட்டாள்களுக்கு வழி இதுதான். அவர்களோடு ஒத்து ஊதவேண்டும். அவர்கள் போக்குக்கெல்லாம் 'ஆமாம்' போடவேண்டியது. காரியத்தை மாத்திரம் நம் இஷ்டப்படி நடத்தவேண்டியது. ஆகவே, "சரி கலியாணத்தை முடித்து விடலாம். நன்ருக யோசனை செய்து, நிகிதாவைக் கண்டு பேசி அவனையும் கலந்துகொண்டு, பீட்டரிடமும் சொல்லிவிட்டு, அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்" என்று சொன்னேன். அதுதான் இப்பொழுது இங்கு நாங்கள் வந்ததற்குக் காரணம்.

அநிஸ்யா: அம்மா! இதெல்லாம் எப்படி முடியப் போகிறதோ? 'அவனைக் கலியாணம் பண்ணிக் கொள்' என்று அகிம் முடிவாகக் கட்டளையிட்டு விட்டால், என்ன செய்வது?

மாத்ரோனு: கட்டளையாவது? யார் கட்டளை யிடுவது? நீ கவலைப்படாதே. அப்படியொன்றும் நேராது. உன் கணவனிடம் போய், இந்த விஷயத்தை நான் முடித்து விடுகிறேன். நன்ரு யிருக்கிறது! இதோ, என் பிள்ளை இன்பமான வாழ்க்கை வாழ்கிருன். இன்பத்தை எதிர்நோக்கியிருக்கிருன். அதை யெல்லாம் கெடுத்து, கெட்டலைந்தவள் ஒருத்தியைக் கொண்டு வந்து அவன் கழுத்தில் கட்டிவிடுவதா என்ன?

அநிஸ்யா: அவனைத் தேடி மரீனு இங்கொரு முறை வந்தாள். அம்மா, 'அவனுக்குக் கலியாணம்' என்றவுடன், என் மார்பிலே ஈட்டியால் குத்தினது போல இருந்தது. அவள்மீது அவனுக்குக் கொஞ்சம் மோகம் உண்டு என்பதும் எனக்குத் தெரியும்.

மாத்ரோனு: வீடு வாசலற்ற ஒரு அனுதையைக் கட்டிக்கொள்ள அவனுக்கென்ன பைத்தியமா? அவனுக்கு அசாத்திய மூளையுண்டு, தெரியுமா? யாரைக் காதலிக்க வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். வீண் கவலைப்படாதே. அவனை நாங்கள் அழைத்துக்கொண்டு போய்விட மாட்டோம். அவனுக்குக் கலியாணமும் இப்போதைக்கில்லை. இங்கேயே அவன் இருக்கலாம். ஆனுல், எங்களுக்கு இப்போது கொஞ்சம் பணம் வேண்டியிருக்கிறது.

அநிஸ்யா: நிகிதா போய்விட்டால், என்னல் உயிர் வாழவே முடியாது.

மாத்ரோனு: வாஸ்தவம்தான். இளமையில் பிரி கிறது என்ருல் சிரமம்தான். உன் புருஷன்............

அநிஸ்யா: ஐயையோ! அந்தப் பேச்சையே எடுக்கவேண்டாம். கேட்கவே பிடிக்கவில்லை. அவ ரைப் பார்க்கிறதே பெரிய இம்சையா யிருக்கிறது.

மாத்ரோனு: இங்கேபார். [அங்குமிங்கும் பார்த்து விட்டு, மெல்லிய குரலில்:] நேற்று ஒரு வைத்தியனைப் பார்க்கப் போயிருந்தேன். அவன் எனக்கு இரண்டு சூரணம் கொடுத்தான். இதோ இருக்கிறது பார், இது உறக்கத்துக்கு மருந்து. இதை உள்ளுக்குக் கொடுத்தால், பக்கத்தில் வெடி வெடித்தாலும் கலை யாத உறக்கம் உண்டாகும். இன்னென்று இருக் கிறதே, இதற்கு வாசனை, ருசி ஒன்றும் கிடையாது. குடிக்கிற பால் அல்லது கஞ்சியோடு சேர்த்துக் கொடுத்துவிடவேண்டியது. இதற்கு வீரியம் அதிகம். ஏழு வேளைக்கு இந்தப் பொட்டலத்தில் மருந்து இருக் கிறது. 'இந்த ஏழு வேளை மருந்தையும் ஒருவன் உட் கொண்ட பிறகு, அவனுக்கு மருந்தே வேண்டியிருக் காது' என்று வைத்தியன் உறுதியாகச் சொன்னன்.

அநிஸ்யா: [நடுங்கிப்போய்:] ஐயையோ! இது என்ன?

மாத்ரோனு: இந்த மருந்து கொடுத்த அடையாள மொன்றுமே தோன்ருதாம். இதற்காக ஒரு ரூபிள் பணம் வாங்கிக் கொண்டான். அதற்குக் குறைந்து கிடைக்காது என்று சொல்லிவிட்டான். என் கையி

லிருந்து பணம் கொடுத்து வாங்கிவந்தேன். "வேண்டு மானுல் வாங்கிக் கொள்கிருள். இல்லாவிட்டால் தேவையுள்ளவர்களுக்கு விற்றுவிடுகிறது" என்று அப்பொழுதே தீர்மானித்துக் கொண்டேன்.

அநிஸ்யா: ஓ! எனக்குப் பயமா யிருக்கிறது. ஏதாவது கெடுதல் நேர்ந்துவிட்டால்!

மாத்ரோனு: கெடுதல் என்ன இருக்கிறது? உன் கணவன் திடகாத்திரனுயிருந்தால் நீ யோசிப்பதெல் லாம் சரிதான். இப்போதிருக்கும் நிலையில், அவன் சாகமாட்டாமல் தவிக்கிருன். அவனுக்கு இவ்வுலக வாழ்வு இல்லவே இல்லை. அவன் இருப்பதும் ஒன்று தான், இறப்பதும் ஒன்றுதான்.

அநிஸ்யா: என் தலை சுற்றுகிறது. மாத்ரோனும் மா, ஏதாவது தீங்கு வருமோ என்று என் மனமும் உடலும் நடுங்குகின்றன......ஊஹூம், அது நடக்கா தம்மா! என்னுல் முடியாது.

மாத்ரோனு: பிறகு உன்னிஷ்டம். இதை அவ னிடத்தில் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்.

அநிஸ்யா: உம்...உம்... தண்ணீரில் கரைத்துத் தானே கொடுக்கவேண்டும்?

மாத்ரோனு: தேயிலை குடிப்பா னல்லவா? அதிலே கலந்து கொடுத்தால் போதும். ருசியிலும் சரி, நிறத்திலும் சரி, வாசனையிலாகட்டும், ஒரு வேற்று மையும் தெரியாது.

அநிஸ்யா: [பொட்டலங்களை வாங்கிக் கொண்டு:] ஐயையோ, தலைவலி சகிக்க முடியவில்லை. என் வாழ்க்கையே நரக வேதனையா யிருக்கிறது.

இல்லாவிட்டால், இதைப்பற்றிக் கனவிலாவது நினைத்திருப்பேனா?

மாத்ரோனா: ரூபிள் ஒன்று என்பது ஞாபகமிருக்கட்டும். அவனுக்கு.......உம்.......இன்னும் கொடுக்கவில்லை.

அநிஸ்யா: ஞாபகமிருக்கும். [ஒரு பெட்டியண்டை போய், அதைத் திறந்து பொட்டலங்களை மறைத்து வைக்கிறாள்.]

மாத்ரோனா: ஒருவர் கண்ணிலும் படாதபடி ஜாக்கிரதையாக வைத்திரு. யாராவது பார்த்துவிட்டால், 'கரப்பான் பூச்சியைக் கொல்லுவதற்காக வைத்திருக்கிறேன்' என்று சொல்லிவிடு. [அநிஸ்யாவிடமிருந்து பணம் பெற்றுக் கொள்ளுகிறாள்.] ஆம்! கரப்பான் பூச்சி உபத்திரவத்தை நீக்கவும் இதை உபயோகிக்கலாம். [சட்டென்று நிற்கிறாள்.]

[அகிம் உள்ளே நுழைகிறான். கிறிஸ்து சிலையை மண்டியிட்டு வணங்குகிறான். அவன் பின்னே பீட்டர் வருகிறான். அகிம், தெளிவாகப் பேசத் தெரியாத ஒரு குடியானவன். இடையிடையே, "நான் சொல்வது என்ன?" "நான் சொல்வது சரிதானே!" "அது என்ன?" என்று சொல்லிக்கொள்வான். அவன் என்ன பேசுகிறான் என்பதைப் புரிந்துகொள்வதே கொஞ்சம் சிரமமான காரியம்.]

அகிம்: முட்டாள்தனமாக நிகிதா ஏதாவது செய்துவிடக்கூடாதே என்றுதான் இவ்வளவு அவசர

மாக நான் இங்கு வந்தது. என்ன நான் சொல்வது? ஆமாம், முட்டாள்தனமாக! யோக்கியமாக அவன் வாழவேண்டும் என்று நான் விரும்புகிறேன். நான் சொல்வதில் தப்புக்கிடையாதே! நல்லபடியாக, உம்!

*பீட்டர்:* எல்லாம் சரி. இப்படி உட்காருங்கள். எல்லாவற்றையும் சாவதானமாய்ப் பேசலாம். [இருவரும் கட்டிலின்மீது உட்காருகிறார்கள்.] என்ன சங்கதி, சொல்லுங்கள். அவனுக்குக் கலியாணம் பண்ணி வீட்டோடு வைத்துக் கொள்ள வேண்டுமென்று உங்களுக்கு ஆசை. அப்படித்தானே?

*மாத்ரோனு:* கொஞ்சகாலம் போகட்டும் என்று நான் நினைக்கிறேன், பீட்டர்! எங்களுடைய தரித்திர நிலை உங்களுக்குத் தெரியாததில்லை. எதை வைத்துக் கொண்டு அப்புறம் வாழ்க்கை நடத்துவது? எங்களுடைய வரும்படி எங்களுக்கே சாப்பாட்டுக்குக் காணவில்லை. இந்த நிலையிலே, நிகிதாவுக்கு எப்படி நாங்கள் கலியாணம் பண்ணுவது?

*பீட்டர்:* எது நன்மை யென்று நீங்களே யோசித்துப் பார்த்து முடிவுசெய்யுங்கள்.

*மாத்ரோனு:* கலியாணத்துக்கு என்ன அவ்வளவு அவசரம்? முற்றினகாயைப் பறிக்காவிட்டால், தானே பழுத்து அழுகிப் போகும். காலத்தில் பறித்தாக வேண்டுமென்பது பழத்துக்குச் சரி. ஆனல், கொஞ்சகாலந் தாழ்ந்துவிட்டால், நிகிதாவுக்குக் கலியாணமே ஆகாமல் போய்விடுமா?

*பீட்டர்:* அவனுக்குச் சீக்கிரம் விவாகம் செய்துவைப்பது ஒரு விதத்தில் நல்லதுதான்.

அகிம் : எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது. ஆமாம். நான் சொல்வதென்ன ? அவனுக்குப் பட்டணத்தில் நல்ல வேலையொன்று பார்த்துவிட்டேன். கட்டாயம் முடித்து வைத்துவிடவேண்டும்.

மாத்ரோனு : நல்ல வேலையாம், வேலை ! சாக்கடை கழுவுகிற வேலை ! அன்றைக்கு இவர் என்னிடம்வந்து இதைச் சொன்னவுடனே பெரிய சண்டை.

அகிம் : துர்நாற்றம் முதல்முதலில் பிடிக்காது தான். ஆனல், வழக்கமாக ஆக, சரியாய்ப் போய் விடும். பணமல்லவா கிடைக்கிறது ? நம்மைப்போலுள்ளவர்களுக்கு, துர்நாற்றத்தைப்பற்றிக் குறை சொல்லிக்கொண்டிருக்க யோக்கியதை உண்டா ? அடிக்கடி உடைமாற்றிக் கொள்ளவேண்டும். நான் சொல்வது சரிதானே ? ஆகவே, நிகிதாவை வீட்டோடு இருக்கச் சொல்லுகிறேன். அவன் வீட்டு விவகாரங்களைக் கவனித்துக் கொண்டால், நானும் ஏதாவது பட்டணத்தில் சம்பாத்தியம் தேடிக் கொள்ளலாம் என்று யோசனை. சரிதானே ?

பீட்டர் : உங்கள் மகனை வீட்டோடு வைத்துக் கொள்ளவேண்டும் என்று நினைக்கிறீர்கள். அதுதான் நல்ல காரியம். ஆனல், எங்களிடம், அவன் முன் பணம் வாங்கியிருக்கிருனே, அது என்னவாகிறது ?

அகிம் : இப்பொழுது எப்படியாவது கலியாணமாகட்டும். அப்புறம், கொஞ்சநாள், உங்கள் பண்ணையில் வேலைசெய்து, வாங்கின பணத்துக்குச் சம்பளத்தை ஈடுசெய்துவிட்டுப் போகிருன். இப்பொழுது அவனை விட்டுவிடுங்கள், கொஞ்ச நாளைக்குத்தான்.

பிட்டர்: அப்படியானுல் சரி.

மாத்ரோனு: இதை நீங்கள் முடிவென்று நினைக்கக் கூடாது, பீட்டர். கடவுள் சாட்சியாய்ச் சொல்லுகிறேன், கேளுங்கள். எங்கள் இரண்டுபேருக்கும் உள்ள இந்த விவாதத்தில் நீங்கள் நடுவாக இருந்து தீர்ப்புச் சொல்லுங்கள். கலியாணம், கலியாணம் என்கிருரே, யாரைக் கலியாணம் பண்ணிக்கொள்ளுவது என்று கேளுங்கள். சரியான பெண்ணுயிருந்தால் நான் என் குறுக்கே நிற்கப் போகிறேன்? இவர் பார்த்திருக்கும் பெண்ணின் நடத்தை சரியில்லை.

அகிம்: அவள் சொல்வது முழுப் பொய். என் மகன்மேல்தான் குற்றம். அவள் நடத்தைப் பிசகுக்கு இவன்தான் காரணம்.

பிட்டர்: எப்படி?

அகிம்: எப்படி யென்ருல், கலியாணமாகாத போது...நான் சொல்லுவ தென்ன வென்ருல்...உம்!

மாத்ரோனு: நான் சொல்லிவிடுகிறேன். உங்கள் பண்ணை வேலைக்கு வருவதற்குமுன், நிகிதா ரயில்வேயில் வேலை பார்த்தானல்லவா? அங்கே ஒரு பெண்ணுக்கும் இவனுக்கும் பரிச்சயமுண்டாம். அவளுக்குச் சொத்து வகையரா ஒன்றும் கிடையாது. பெயர், மரீனு. ரயில்வே தொழிலாளர் சிலபேருக்கு அவள் சமையல் செய்துபோட்டுச் சம்பாதித்து ஜீவனம் செய்து வந்தாள். அவள்தான் இப்போது நிகிதா தன்னைக் கெடுத்துவிட்டதாகப் புகார் சொல்லுகிருள்.

பிட்டர்: உன் மகன் செய்கை சரியானதா?

மாத்ரோனு : அவளும் யோக்கியமானவளல்ல. அவள் கெட்டலேந்தவள் என்பதை உலகம் அறியுமே!

அகிம் : இதெல்லாம் முழுப்பொய். அது வந்து... உம், அதெல்லாம்......என்ன வென்ருல்,......

மாத்ரோனு : இவர் சொல்வது என்னவென்பது இவருக்கே புரிகிறதோ என்னவோ? பீட்டர், நான் சொல்வதை மட்டும் நீங்கள் நம்பவேண்டாம். இந்தப் பெண் எப்படியென்று நீங்களாகவே யாரையாவது கேளுங்கள். நான் சொன்னதையே எல்லோரும் சொல்வார்கள். அவள் வீடுவாசலற்ற அனுதை.

பீட்டர் : அகிம், இவள் சொல்வது உண்மையானுல், கலியாணத்துக்கு இப்போது அவசியமில்லே. தீர யோசித்து முடிவுபண்ண வேண்டிய விஷயம் இது. இப்போது கலியாணம் பண்ணிவிட்டு, அப்புறம் இஷ்டமில்லாதபோது, அடித்துத் துரத்திவிட முடியாது.

அகிம் : [கலவரமடைந்து :] அந்தப் பெண்ணேப் பற்றி இவள் சொன்னதெல்லாம் அநியாயம். அவள் ரொம்ப நல்ல பெண். அவள் விதியை நினைத்து நான் வருந்துகிறேன். நான் சொல்வது சரிதானே? உம்...

மாத்ரோனு : தம் சொந்த மகனேப் பற்றி கவலேயில்லே, அவளேத் தூக்கித் தலேயில் வைத்துக்கொண்டு கூத்தாடுகிருர். இதெல்லாம் வெறும் பேச்சு.

அகிம் : இது வெறும் பேச்சல்ல. உம்......

மாத்ரோனு : இடையில் பேசவேண்டாம். நான் சொல்லவேண்டியதைச் சொல்லிவிடுகிறேன்.

*அகிம் :* வெறும் பேச்சில்லே. நீ விஷயத்தை யெல்லாம் உன் மனதுக்குத் தக்கபடி திரித்துக்கொள் கிருய்...ஆனுல் கடவுளிருக்கிருர். அவரிஷ்டப்படித் தான் எல்லாம் நடக்கும். தெரிந்ததா?

*மாத்ரோனு :* உங்களோடு பேசி என் தொண் டைத் தண்ணீரை வற்ற வைக்கிறதனுலே காணப் போவது என்ன ?

*அகிம் :* அந்தப் பெண், வேலேயிலே கெட்டிக் காரி. வீடு, வயலே யெல்லாம் சரியாகப் பார்த்துக் கொள்வாள். கலியாணத்துக்குச் செலவும் அதிகமா காது. நிகிதா அவளேக் கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டு மென்பதற்குக் காரணம் வேருென்றுண்டு. அதாவது, நிகிதா அவளேக் கெடுத்துவிட்டதுதான்.

*மாத்ரோனு :* அதெல்லாம் வெறும் கதை.

*அநிஸ்யா :* கலியாண விஷயத்தில் பெண்கள் சொல்வதற்குக் கொஞ்சம் காது கொடுக்க வேண் டும், அகிம் மாமா. எவ்வளவோ உபயோகமான விஷயங்கள் எங்களால் தான் வெளியாகும்.

*அகிம் :* கடவுள் ஒருத்தர் இல்லேயா? என்ன நான் சொல்வது? அந்தப் பெண்ணும் ஒரு மனிதப் பிறவி தானே!

*மாத்ரோனு :* உம்! மறுபடியும் ஆரம்பித்து விட் டீர்களா?

*பீட்டர் :* அகிம்! கொஞ்சம் பொறுங்கள். இவர் கள் சொல்வதெல்லாவற்றையும் அப்படியே நம்பி விடக்கூடாது. நிகிதா இங்குதானே இருக்கிருன்!

அவனைக் கூப்பிட்டு விசாரித்து விட்டால், எல்லாம் தெரிந்து போகிறது. தனக்குக் கெடுதி செய்து கொள்ள அவனே சம்மதிப்பானா? அநிஸ்யா! நீ போய் அவனை அழைத்துவா. [அநிஸ்யா வெளியே போகிறாள்.]

மாத்ரோனா: அதுதான் சரி. அவனே சொல் லட்டுமே! காலம் மாறிப்போய் விட்டது. ‘கலியா ணம் செய்துகொள்’ என்று பிள்ளைகளைக் கட்டாயப் படுத்துகிற பழைய காலம் போய்விட்டது. நிகிதா, கலியாணம் பண்ணிக் கொண்டு அதனாலே தான் கெட்டுப் போவதை ஒரு நாளும் விரும்ப மாட்டான். அவன் இங்கேயே உங்கள் பண்ணையில் வேலை செய் யட்டும். எல்லோருக்கும் அதுதான் நல்லது. கோடை காலத்திலும் அவன் எங்கள் ஊருக்கு வரவேண்டாம். எங்கள் வயல் வேலைக்குப் பணங்கொடுத்து ஆள் வைத்துக் கொள்கிறோம். அதற்குப் பத்து ரூபிள் பிடிக்கும், பீட்டர்! அதை மட்டும் முன்னால் தந்து உதவவேண்டும்.

பீட்டர்: பார்க்கலாம். முதல் காரியத்தை ஒரு விதமாக முடிவு செய்த பிறகு, இந்தக் காரியத்தைப் பற்றிப் பேசிக்கொள்ளலாம்.

அகிம்: பீட்டர், நமக்கு நல்லது என்று தோன்றுகிறபடி நாம் திட்டம் வகுக்கிறோம். கடவுள் ஒருவர் உண்டு என்பதையே மறந்து விடுகிறோம். இல்லையா? நமக்குத் தெரியாதது எதுவுமில்லை என்ற நினைப்பு, எல்லாவற்றையும் கெடுத்துத் தொலைத்து விடுகிறது. சரிதானே?

பீட்டர்: ஆம்! எந்தத் திட்டத்திலும் கடவுளை மறந்துவிடக் கூடாது.

அகிம்: அப்படியானால், நான் சொல்லுவதைக் கேளுங்கள். என்ன? இந்தப் பயல் செய்த பாவத்திலிருந்து மீள வேண்டுமானால், அவன் மரீனாவைக் கலியாணம் செய்துகொள்ளத்தான் வேண்டும். சரிதானே! அதுதான் நியாய சம்மதமானது. அது மாத்திரம் என்ன? பட்டணத்துவேலையையும் இவனுக்கு அமர்த்திக் கொடுத்து விடுகிறேன். சரிதானே! குடும்பத்துக்குப் போதுமான வரும்படி, வேலையிலே கிடைக்கும். தவிரவும், அந்த மரீனா, அனாதைப் பெண்ணல்லவா?

[நிகிதாவும், அன்னாவும் வருகிறார்கள்.]

நிகிதா: என்னை அழைத்தீர்களா அப்பா?

[தரையில் உட்கார்ந்துகொண்டு, தன் புகையிலைப் பெட்டியை எடுக்கிறான்.]

பீட்டர்: [சற்றே வெறுப்புத் தொனிக்கும் குரலில்:] உனக்கு மட்டு, மரியாதை கிடையாதா? உங்கள் அப்பா, ஏதோ அவசியமாய்ப் பேச விரும்புகிறார். நீ புகையிலையை எடுத்துக் கசக்கிக் கொண்டிருக்கிறாயே? எழுந்திருடா.

[நிகிதா எழுந்து, ஒரு மேஜை மீது முழங்கையை ஊன்றி நின்று, ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரிக்கிறான்.]

அகிம்: நிகிதா, உன்னைப்பற்றி ஒரு புகார் வந்திருக்கிறது. நான் சொல்வது தெரிகிறதா?...... ஒரு புகார்.

நிகிதா: யார் சொன்னது?

அகிம்: ஒரு அனுதைப் பெண். பெயர் மரீனு.

நிகிதா: அது சரி. என்ன குற்றமாம்? அவளே நேரில் வந்தாளா?

அகிம்: நீ அவளிடம் வித்தியாசமாக நடந்து கொண்டதுண்டா? நேரே பதில் சொல்லு.

நிகிதா: நீங்கள் சொல்வது கொஞ்சமும் விளங்கவில்லேயே!

அகிம்: முட்டாள் தனமாக ஏதாவது!

நிகிதா: சமையல்காரியோடு ஏதாவது விளே யாட்டாக வார்த்தை சொல்லியிருக்கலாம். ஏதாவது ஒரு சமயம் விடுமுறை விட்டபோது, கூட்டத்தோடு கூட்டமாய் அவளோடு நடனமாடி யிருக்கலாம். அதற்குமேல் என்ன இருக்க முடியும்?

பீட்டர்: மறைக்காதே. உங்கள் அப்பா கேட்ட கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லு.

அகிம்: [விறைப்பாக:] மனிதனிடத்து எதை யும் மறைத்துவிடலாம். கடவுளிடத்து மறைக்க முடியாது. நான் சொல்வது என்ன? பொய் சொல் லாதே! அவள் ஒரு அனுதை. யாரும் எளிதாக அவளே மானபங்கப்படுத்தி விடலாம். அவள் ஒரு அனுதை யென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். உள்ளதை அப்படியே சொல்லிவிடு.

நிகிதா: இது விஷயமாக நான் சொல்வதற்கு ஒன்றுமே யில்லே. நான் எல்லாவற்றையும் சொல்லி

விட்டேன். [உணர்ச்சி வேகத்தில் :] அவள் என்னைப் பற்றி எது வேண்டுமானாலும் சொல்லிக்கொண்டு அலையட்டும். என்னைப்பற்றி மட்டும்தானா அவள் குறை சொல்லுகிறாள்? எல்லோரும் அவளோடு விளையாட்டாகப் பேசுவார்கள். நானும் அப்படித் தானே நடந்து கொண்டேன்? உம்...அவள் விரும் பியபடி என்னைப்பற்றிச் சொல்லட்டுமே? எனக் கென்ன?

அகிம்: அடே நிகிதா! யோசித்துச் சொல்லு. பொய் என்றைக்காவது ஒரு நாள் வெளியாய்த்தான் தீரும். உங்களுக்குள் ஏதாவது நடந்திருந்தால் ஒளிக்காமல், ஒப்புக்கொள்வது நல்லது. என்ன!

நிகிதா: [தனக்குள்:] இவரைப் பார். சொன்ன தையே திரும்பவும் சொல்லுகிறார். [அகிமிடம்:] நான் சொன்னதற்கு மேல் எனக்கொன்றும் தெரி யாது. எங்களிடையே எத்தகைய உறவும் இருந்த தில்லை. [கோபமாக:] கடவுள் மீது ஆணை! இங்கேயே என் உயிர் போவதா யிருந்தாலும் சரி; இதுதான் உண்மை. [மௌனம். பிறகு உணர்ச்சி மிகுந்த குர லில்:] எப்படியாவது அவளையும் என்னையும் பலவந்தத் தால் பிணைத்து வைக்க வேண்டும் என்று நினைக்கிறீர் கள். இதற்குக் காரணம் என்ன? இந்தக் காலத்தில் கலியாணம் செய்து கொள்ளும்படி ஒருவனை நிர்ப்பந் திக்கப் பெற்றோருக்கு உரிமை கிடையாது என்பது உங்களுக்குத் தெரியாது போலிருக்கிறது. தவிரவும், எனக்கு ஒன்றுமே தெரியாதென்று நான் ஆணை யிட்டுச் சொல்லவில்லையா?

மாத்ரோனு : [தன் கணவனிடம் :] ஒன்றுமில்லா ததைப் பிரமாதமாக்கி அவன் மானத்தைக் கெடுத்து விட்டீர்கள். அவன் இங்கேயே தங்குவதுதான் அவனுக்கு நல்லது. இப்பொழுது நமக்குத் தேவை யான பத்து ரூபிளையும் பீட்டர் கொடுப்பார். அப் புறம், சமயம் வாய்த்த பொழுது......

பீட்டர் : அகிம், நீங்கள் சொல்லுங்கள். இப் பொழுது என்ன செய்ய உத்தேசம் ?

அகிம் : [நிகிதாவைப் பார்த்து :] நிகிதா, இது விளையாட்டல்ல. ஒரு அனுதைப் பெண்ணின் கண் ணீர் வீண் போகாது. தீங்கிழைத்தவனை அது குடும் பத்தோடு நிர்மூலமாக்கிவிடும். உண்மையைச் சொல்லிவிடு. என்ன ?

நிகிதா : சொல்வதற்கென்ன இருக்கிறது ? உங் கள் வேலையைப் பார்த்துக்கொண்டு போங்கள்.

அன்னு : [தனியாக :] ஓடிப்போய் அம்மா விடம் சொல்ல வேண்டும். [போகிருள்.]

மாத்ரோனு : [பீட்டரிடம்:] உங்களுக்குத் தொந் தரவு கொடுத்ததற்கு மன்னிக்கவேண்டும். முன்னைப் போலவே நிகிதா இங்கிருக்கட்டும். அவன் என்றும் போல உங்கள் பண்ணையாள்.

பீட்டர் : அகிம், நீங்கள் என்ன சொல்லுகிறீர் கள் ?

அகிம் : அவனிஷ்டம் போல நடக்கட்டும்.

பீட்டர் : இதைக் கேளுங்கள். கோடைக்காலத் தில் இவனை அழைத்துச் செல்ல உத்தேசமென்ருல்

இப்பொழுதே அழைத்துப் போங்கள். வருஷம் முழுவதும் இங்கேயே இருப்பதென்றால்தான் நான் இவனை வேலைக்கு வைத்துக்கொள்ள முடியும்.

*மாத்ரோனு :* வருஷம் முழுவதும் அவன் உங்களிடம் இருக்கட்டும். வேலை நெருக்கடியா யிருந்தால் நாங்கள் வேறு கூலியாள் பார்த்துக் கொள்கிறோம். அதற்கு இப்பொழுது பத்து ரூபிள் வேண்டும்.

*பீட்டர் :* இந்த வருஷம் முழுதும் இங்கிருக்க வேண்டும். இது சம்மதந்தானே ?

*அகிம் :* [பெருமூச்சு விட்டு :] ஆம் !

*மாத்ரோனு :* ஆம்! வருகிற மாதப்பிறப்பி லிருந்து சரியாக ஒரு வருஷம். நீங்கள் ஒழுங்காகக் கூலி கொடுத்து விடுவீர்கள் என்பது தெரிந்த விஷயந்தான். இப்பொழுது பத்து ரூபிள் அவசரமாக வேண்டியிருக்கிறது.

[எழுந்து பீட்டரை வணங்குகிறாள். அன்னுவும் அநிஸ்யாவும்வருகிறார்கள்.

*பீட்டர் :* சரி ; பக்கத்திலுள்ள ஓட்டலுக்குப் போய், நல்லதாய் ஏதாவது குடிக்கலாமே ! அகிம், உங்களுக்கு 'வாட்கா' பானம் பிடிக்குமா ?

*அகிம் :* நான் குடிவகைகள் எதையும் தொடுவதில்லையே ?

*பீட்டர் :* தேநீர்ப்பானம் !

*அகிம் :* அப்படியானல் சரி.

*பீட்டர் :* இவர்களும் வரட்டும். நிகிதா, நீ போய் ஆடுகளைப் பட்டியில் அடை. அதற்கப்புறம்,

இறைந்துகிடக்கும் வைக்கோலை ஒன்று சேர்த்துக் கட்டிவை. நீ போ.

[நிகிதாவைத் தவிர மற்றவர்கள் போகிறார்கள்.]

நிகிதா: அப்படியே! [ஒரு சிகரெட்டைப் பற்ற வைக்கிறான்.] இந்தக் கிழவர் சொல்லைக் கேட்டால் உருப்பட்டுப் போகலாம்! எல்லோரையும் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டியதுதான்! கல்யாணம் இப்பொழுது எதற்கு? கல்யாணம் பண்ணிச் சுகப்படுகிறதைவிட, இப்போதிருப்பதே சௌகரியமானதில்லையா? எத்தனை பேர் என் மீது பொறாமைப் படுகிறார்கள்? ஆனாலும்,...ஆனாலும், கடவுள் மீது ஆணை யென்ற போது, என் குரலில் என்னையும் அறியாமல் ஒரு நடுக்கங் கண்டதே, அது ஏன்? இதற்கெல்லாம் பயப்படுகிறவன் நிகிதாவா? பொய் ஆணையிட்டால் உள்ளுக்குள் பயமா யிருக்கும் என்று சொல்லுவார்களே! எல்லாம் வெறும் பேச்சுத்தான்.

[அகுலினா கையில் கயிற்றுடன் வருகிறாள்.]

அகுலினா: இருட்டில் என்ன செய்கிறாய்? விளக்கு ஏற்றி வைத்துக் கொள்ளப்படாதா?

நிகிதா: ஏன், உங்கள் அழகைப் பார்ப்பதற்கா? வெளிச்ச மில்லாமலே ஒளி வீசுகிறதே!

அகுலினா: அட குரங்கு! [அறையினுள் போகிறாள்.]

[அன்னா உள் நுழைந்து, நிகிதாவின் காதோடு சொல்லுகிறாள்.]

அன்னு: யாரோ வந்து உன்னைப் பார்க்கணும் என்கிருள்.

நிகிதா: யாரது?

அன்னு: மரீனுவாம்! வெளியே காத்துக்கொண்டிருக்கிருள்.

நிகிதா: என்ன வேண்டுமாம்?

அன்னு: உன்னை நேரில் பார்த்து ஒரே ஒரு வார்த்தை சொல்ல வேண்டுமாம். 'என்ன சொல்ல வேண்டுமோ அதை என்னிடம் சொல்லு; நான் சொல்லி விடுகிறேன்' என்றேன். 'சரி, அவன் உங்கள் வேலையை விட்டுப் போகப் போகிருனமே உண்மைதானு?' என்று கேட்டாள். நான் விஷயத்தைச் சொன்னேன். 'எப்படியாவது நான் அவனைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். வரச்சொல்லு' என்ருள். உனக்காக வெகு நேரமாய்க் காத்துக் கொண்டிருக்கிருள்.

நிகிதா: இது எது தொந்தரவு! உம்,...நான் ஏன் அவளைப் போய்ப் பார்க்கணும்?

அன்னு: நீ போய்ப் பார்க்காவிட்டால், அவளே உள்ளே வந்துவிடுவாளாம்.

நிகிதா: ஊஹும்......அதெல்லாம் வரமாட்டாள் கொஞ்ச நேரம் காத்திருப்பாள். அப்புறம் போய்விடுவாள்.

அன்னு: 'நிகிதா, அகுலினவைக் கலியாணம் பண்ணிக்கொள்ளப் போவதாகச் சொல்லுகிருர்களே, நிஜந்தானு?' என்று கேட்டாள்.

[அகுலினு அறையினின்றும் வெளியே வருகிருள். கடைசி வாக்கியம் மட்டும் அரைகுறையாக அவள் காதில் விழுகிறது.]

அகுலினு : அகுலினுவுக்கும் யாருக்கும் கலியாணம் ?

அன்னு : நிகிதாவுக்கும்.

அகுலினு : ரொம்ப நல்லது ! யார் சொன்னது ?

நிகிதா : [அவளேயே உற்று நோக்கி நகைக்கிருன்.] பொதுவாக, ஊரில் பேச்சு. என்னே விவாகம் செய்துகொள்ள உனக்கு இஷ்டம்தானே, அகுலினு ?

அகுலினு : கொஞ்ச காலத்துக்கு முன்னுல் வேண்டுமானுல், போனுல் போகிறது என்று சம்மதித்திருப்பேன். ஆனுல், இப்பொழுது, முடியவே முடியாது.

நிகிதா : காரணம் ?

அகுலினு : ஏனென்ருல், என் மீது அன்பு செலுத்த உனக்குச் சுதந்திரம் கிடையாது.

நிகிதா : ஏன் இல்லே ?

அகுலினு : கூடாதென்று உனக்குக் கட்டளே.

நிகிதா : கட்டளேயா ? யார் எனக்குக் கட்டளே யிடுவது ?

அகுலினு : யார் ? எல்லாம் என் சின்னம்மா தான். நீ என்னேடு பேசும்போதெல்லாம், எனக்குக் கேட்காதபடி ஏதோ முனகுகிருள். எப்பொழு

தும் உன் மூஞ்சியையே பார்த்துக்கொண்டிருக்கிருள். கொஞ்சமும் பிடிக்கவில்லை எனக்கு.

நிகிதா : [தனக்குள் சிரிக்கிருன்.] இவள் சொல்வதைப் பார்த்தாயா ?

[அகுலினு மறுபடியும் அறைக்குள் போய்விடுகிருள்.]

அன்னு : [ஜன்னல் வழியாகத் தெருவைப் பார்த்தபடியே :] நிகிதா, மரீனு இங்கேயே வந்துவிட்டாள். இங்கே வந்து பார். [வெளியே போகிருள்.]

[மரீனு வருகிருள்.]

மரீனு : நீ என்னவெல்லாம் தான் செய்ய நினைத்துக்கொண்டிருக்கிருய் ?

நிகிதா : ஒன்றுமே செய்ய நினைக்கவில்லை.

மரீனு : என்னைக் கைவிடத்தானே எண்ணம் ?

நிகிதா : [கோபத்தோடு எழுந்து :] இங்கே நீ ஏன் வந்தாய் ? நீ வருவதற்கு ஒரு காரணமும் கிடையாதே !

மரீனு : நிகிதா !

நிகிதா : இங்கு நீ ஏன் வரவேண்டும் ?

மரீனு : நிகிதா !

நிகிதா : ஆம் ! அதுதான் என் பெயர். என்னிடமிருந்து என்னதான் எதிர்பார்க்கிருய் ? சரி, அப்புறம்...சரி, சரி. போய்வரலாம்.

மரீனு : நீ என்னை வஞ்சித்துக் கெடுத்து விட்டாய்.

*நிகிதா :* உன்னோடு பேசுவதற்கு ஒன்றுமில்லை. அன்னாவிடம் நீ சொல்லியனுப்பியபோது நான் வரவில்லையல்லவா? அதுவே உனக்கு எல்லாவற்றையும் தெளிவாக்கவில்லையா? எனக்கு உன்னைப் பிடிக்கவேயில்லை.

*மரீனா :* என்னைப் பிடிக்கவில்லை! இவ்வளவு காலத்துக்குப் பிறகு திடீரென்று என்னைப் பிடிக்கவில்லை! என்னைக் காதலிப்பதாக நீ சொன்னதை உண்மையென்று நம்பி மோசம் போனேன்.

*நிகிதா :* அனாவசியமாய்ப் பேசாதே. அப்பாவிடம் போய் உன்னை யார் கட்டுக் கதைகள் அளக்கச் சொன்னது? நேராகப் போய்விடு.

*மரீனா :* என் உள்ளம் உனக்குத் தெரியும். அதை உனக்கே உடைமையாக்கியிருந்தேன். நீ என்னை விவாகம் செய்து கொண்டாலும் சரி, செய்து கொள்ளாவிட்டாலும் சரி, எனக்கு உன்மேல் என்றுமே கோபமுண்டாகாது. நான் உனக்கு ஒரு குற்றமும் செய்யவில்லை. இது உனக்கு மனப்பூர்வமாய்த் தெரியும். பின் ஏன் என்னை இப்படி வருத்துகிறாய்? ஏன்? சொல்லேன்.

*நிகிதா :* சூரியனைப் பார்த்து நாய் குரைத்தால், அதற்கென்ன வந்தது? உடனே போய்விடு! உனக்கு இங்கு வேலையில்லை.

*மரீனா :* என்னைக் கலியாணஞ் செய்துகொள்ள மாட்டேன் என்று நீ மறுப்பது கூட எனக்கு அவ்வளவாக வருத்தமில்லை. என்மீது உன் மனதிலிருந்த அன்புகூட மறைகிற காலமும் வந்துவிட்டதே! அதுதான் எனக்கு வருத்தம். அதற்கு மேலாக, என்னை

விட்டுவிட்டதோடு மட்டுமில்லாமல், இன்னொருத்தியைத் தேடி யடைந்தாயே! அதைத்தான் என்னால் பொறுக்க முடியவில்லை. அவள் யாரென்பது எனக்குத் தெரியும்.

நிகிதா : [அவளை அலக்ஷியமாகப் பார்த்துக் கொண்டு :] உனக்கு நியாயமே தெரியவில்லை. உன்னைப் போன்றவர்களோடு பேசிப் பயன் என்ன? இந்த நிமிஷமே இங்கிருந்து கிளம்பாவிட்டால், நீயே பின்னால் வருந்த நேரும்!

மரீனா : என்னை அடிப்பாயாக்கும்! அடித்துக் கொள். எதற்காக இப்படி அடித்துத் துரத்துகிறாய்! நிகிதா.........!

நிகிதா : யாராவது வந்தால் என்ன நினைப்பார்கள்? வெறும் மோசம். பேசிப் பேசிப் பொழுதைப் போக்காதே, உம்!

மரீனா : அப்படியானால், இதுதான் முடிவாக்கும்! நடந்தது நடந்துவிட்டது. நிகிதா, இதைக் கேள் : என் கண்ணின் மணிபோல என் கற்பைக் காத்து வந்தேன். உன் பாசாங்கில் மயங்கி அதைப் பறிகொடுத்து விட்டேன். தாய் தந்தையற்ற அனாதையான என்மேல் உனக்கு இரக்கமில்லை. என் மானத்தைக் கெடுத்துப் பின் என்னைக் கைவிட்டுவிட்டாய். என்னைவிட நல்லவளொருத்தி உனக்கு மனைவியாகக் கிடைத்தால், என்னை மறந்துவிடுவாய். இல்லாவிட்டால், என் ஞாபகம் உனக்கு நிச்சயமாய் வரவே செய்யும். நிகிதா, நான் போய் வருகிறேன். இதுமட்டும் உண்மை. உன்மீது எனக்குக் கோபமில்லை. போய்வருகிறேன்.

[அவனது கையைப் பற்றி முத்தமிட முயலுகிருள். அவன் முரட்டுத்தன மாகக் கையை உதறித் தன்னை விடு வித்துக் கொள்கிருன்.]

நிகிதா : உன்னோடு பேச எனக்கு மனமில்லை. உடனே இங்கிருந்து நீ போகாவிட்டால், நான் வெளியே போய்விடுகிறேன். நீ இங்கேயே இருக்க லாம்.

மரீனு : [அழுதுகொண்டே :] நீ ஒரு மிருகம். [கதவண்டை சென்று நின்றுகொண்டு :] உனக்கு என்றும் கடவுள் சுகங்கொடுக்கமாட்டான் !

[அழுதுகொண்டே வெளியே போகி ருள். அகுலினு அறையிலிருந்து வெளி வருகிருள்.]

அகுலினு : நீ ஒரு வஞ்சகன், நிகிதா !

நிகிதா : என்ன விஷயம் ?

அகுலினு : அவளை நீ படுத்தின பாடு என்னைத் திகைப்படையச் செய்தது. என்னையும் இப்படித் தானே வருத்தியிருப்பாய் ? நீ ஒரு முரடன்.

[திரும்பவும் அறைக்குள் போகிருள்.]

[மௌனம்.]

நிகிதா : ஒரே குழப்பம் ! பெண்களோடு பாப கிருத்தியம் செய்தால் !.........அட கடவுளே !

முதல் அங்கம் முற்றும்.

---

# இரண்டாம் அங்கம்

[முன் அங்கத்தில் கண்ட சம்பவங்கள் நடந்து ஆறு மாதம் ஆகிவிட்டது. பழைய கிராமத்தில் ஒரு பெரிய தெரு. தெருவின் இடது சரகில் பீட்டரது வீட்டின் தலைவாசல் தெரிகிறது. வீடு, மரத்தால் கட்டின வீடு. வலது புறத்தில், ஒரு முற்றம். முற்றத்தைச் சுற்றி முள் வேலி. இம்முற்றத்தில், அநிஸ்யா, விரித்திருக்கும் சணலை ஒரு கழியினால் ஓங்கித் தட்டிக் கொண்டிருக்கிறாள்.]

*அநிஸ்யா:* [வேலையை நிறுத்திக் கவனிக்கிறாள்.] ஏதோ முணுக ஆரம்பித்துவிட்டார். கணப்பிலிருந்து கீழிறங்கிவிட்டார் போலிருக்கிறது.

[அகுலினா இடுப்பில் ஜலம் நிறைந்த குடத்தோடு வருகிறாள்.]

*அநிஸ்யா:* அவர் கூப்பிடுகிறார். என்னத்துக்கு இப்படி ஊளையிடுகிறார் என்று கேள், போ.

*அகுலினா:* நீ போனால் என்ன?

*அநிஸ்யா:* போவென்றால் போ! [அகுலினா குடிசைக்குள் போகிறாள்.] இவர் தொந்தரவு தாங்க முடியவில்லை. செத்துத் தொலைந்தாலாவது தேவலை!

பணத்தை எங்கேயோ பத்திரப் படுத்திவிட்டார்! அன்றைக்கு இந்த வாசற்படியைச் சுற்றி சுற்றி அலேந்துகொண்டிருந்தார். இங்கேதான் பணத்தை யெல்லாம் ஒளித்து வைத்திருக்கிறுர் போலிருக்கிறது. எப்படியாவது கண்டுபிடித்தாகவேண்டும்.

[அகுலினு, தலேயிலே ஒரு துண்டைக் கட்டியபடி, முற்றத்துக்கு வருகிருள்.]

அநிஸ்யா: அம்மா எங்கேயோ புறப்பட்டு விட்டாற் போலிருக்கே?

அகுலினு: போகும்போதே எங்கே, எங்கே என்று அபசகுனம் போலக் கேட்காதே. 'எனக்கு அசதியாயிருக்கிறது, உன் அத்தை மார்த்தாவைக் கையோடு அழைத்துவா' என்று அப்பா சொன்னுர். அவளேக் கூப்பிடத்தான் போகிறேன்.

அநிஸ்யா: [தனக்குள்:] எதற்காக அவளேக் கூப்பிட்டனுப்பவேண்டும்? எல்லாவற்றையும் அவ ளுக்கே அடைத்துவிட்டுச் சாகணும் என்று நினேக் கிருர் போலிருக்கிறது. [அகுலினுவை நோக்கி:] போதும், போதும். நீ எங்கும் போகவேண்டாம்.

அகுலினு: போகவேண்டாமா? நீ என்ன சொல்லுகிறது?

அநிஸ்யா: நான் சொல்வதைக் கேள். நீ போக வேண்டாம். நானே போய் வருகிறேன். நீ அழுக்குத் துணிகளேக் கொண்டுபோய் ஆற்றங்கரையில் துவைத் துக்கொண்டு வா. அங்கே நீ போனுல், இன்று முழு தும் திரும்பி வரமாட்டாய்.

அகுலினு: என்னைத்தானே அப்பா போகச் சொன்னர்.

அநிஸ்யா: அதைப் பற்றியென்ன? நானே போய் மார்த்தாவை அழைத்து வருகிறேன். நீ துணி மணிகளை எடுத்துக்கொண்டு ஆற்றுக்குப் போ.

அகுலினு: அப்பா சொன்னபடிதான் நான் கேட்பேன்! நீ ஒன்றும் போகவேண்டியதில்லை.

அநிஸ்யா: நானே போகிறேன் என்று ஆயிரந் தடவை சொல்கிறேனே! காது கேட்கவில்லையா உனக்கு? அன்னு எங்கே?

அகுலினு: கன்றுக்குட்டிக்கு வைக்கோல் வைத்துக் கொண்டிருக்கிருள்.

அநிஸ்யா: அவளை இங்கே வரச்சொல்.

[அகுலினு அழுக்குத் துணிகளைச் சேகரித்துக்கொண்டு வெளியே போகிருள்.]

அநிஸ்யா: யாராவது போய் அவளை அழைத்து வராவிட்டால், இவர் எல்லோரையும் திட்ட ஆரம்பித்துவிடுவார். அவள் சமயத்துக்கு வந்துவிட்டால், பணம் பூராவையும் அவளிடம் கொடுத்துவிடுவார். இந்தத் தர்ம சங்கடத்துக்கு என்ன செய்வது? யோசனை பண்ணிப் பண்ணி, என் மண்டை வெடித்து விடும் போலிருக்கிறது.

[மாத்ரோனு தெருவிலிருந்து முற்றத்துக்குள் நுழைகிருள்.]

மாத்ரோனு: என்னம்மா, சௌக்கியந்தானே?

அநிஸ்யா: [திடுக்கிட்டு, வேலையை நிறுத்தித் திரும்பிப் பார்க்கிருள். முற்றத்தினுள் நுழையும் மாத்ரோனுவைப் பார்த்ததும், மகிழ்ச்சியால் கை கொட்டுகிருள்:] வாருங்கள், நீங்களா! நான் எதிர் பார்க்கவேயில்லை. கடவுள் செயல் இது. நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தீர்கள்.

மாத்ரோனு: ஏதாவது விசேஷமுண்டா?

அநிஸ்யா: எனக்குப் பைத்தியமே பிடித்து விடும்போலிருக்கிறது! இனிமேல் இதையெல்லாம் சகித்துக்கொண்டு அரை விளுடிகூட இங்கே இருக்க முடியாது.

மாத்ரோனு: அவன் இன்னும்...உயிரோடிருக்கிருனு?

அநிஸ்யா: அதையேன் கேட்கிறீர்கள்? அவருக்குச் சாவே கிடையாது போலிருக்கிறது.

மாத்ரோனு: பணம் என்னவாயிற்று?

அநிஸ்யா: எல்லாவற்றையும் கொடுத்துவிடத் தானே என்னவோ, மார்த்தாவைக் கூட்டிவரச் சொல்லியிருக்கிருர்.

மாத்ரோனு: அப்படியா? இதுவரை யாருக்கும் கொடுத்துவிட வில்லையே?

அநிஸ்யா: நான்தான் கண்ணில் எண்ணெயை விட்டுக்கொண்டு காத்து வருகிறேனே! யாரிடம் கொடுத்துவிட முடியும்?

மாத்ரோனு: எங்கே யிருக்கிறது பணம்?

அநிஸ்யா: வெளியே சொல்லமாட்டேனென்கிருர். எப்பொழுதும் பதிவாக ஒரே இடத்தில்

ஒளித்து வைப்பதில்லை. இன்று ஓரிடம், நாளை வேறிடம், இப்படி. இவ்வளவு நாளாய் என்னைக் கவலை பிடுங்கித் தின்றது.

*மாத்ரோனு :* இதை ஞாபகம் வைத்துக் கொள் ; உன்னைத் தவிர வேறு யாரிடமாவது அவன் பணத்தைக் கொடுத்துவிட்டால், உன் கதி நிர்க்கதிதான். மனத்திலே அன்பில்லாமல் இத்தனை காலம் அவனோடு வாழ்ந்ததே போதாதா? அவன் இறந்தபின்னும் அவனால் துன்பந்தானு?

*அநிஸ்யா :* அம்மா, இதை யெல்லாம் சொல்லி எதற்கு? மனத் தளர்ச்சியால் எனக்கு எதுவும் செய்ய ஓடவில்லை. இதுவரை எனக்குப் புத்தி சொல்லவும் இங்கு ஆளில்லை. உம்... அதை நிகிதாவிடம் சொன்னேன். அவன் பயந்து நடுங்குகிருன். அவன் எனக்காகச் செய்த நன்மை யெல்லாம், நேற்று பீட்டர் குழிதோண்டிப் பணத்தைப் புதைத்ததைத் தான் கண்டதாகச் சொன்னது ஒன்றுதான்.

*மாத்ரோனு :* அவன் சொல்லிய இடத்தில் பார்த்தாயா?

*அநிஸ்யா :* பார்க்க முடியவில்லை. அவரே அறைக்குள்ளிருந்தார். சில வேளைகளில், அவர் தம் உடையிலேயே எங்கேயாவது பணமுடிச்சை மறைத்துக்கொள்கிருர்.

*மாத்ரோனு :* [மெதுவாக :] தேயிலைப் பானத்தில் நான் கொடுத்த மருந்தைக் கலந்து கொடுத்தாயா?

*அநிஸ்யா :* ஓ! [ஏதோ சொல்ல வாயெடுத்தவள், பக்கத்து வீட்டுக்காரி யொருத்தி முற்றத்தின் பக்க

மாகப் போவதைப் பார்த்து, பேசாமலிருந்து விடு கிருள்.]

*பக்கத்து வீட்டுக்காரி :* அநிஸ்யா! அநிஸ்யா! உன் வீட்டுக்காரர் பின்னுலிருந்து கூப்பிடுவது கேட்கவில்லையா உனக்கு?

*அநிஸ்யா :* அவர் கூப்பிட்டால் எனக்குக் கேட்காதா, என்ன! தொண்டைப் புகைச்சல் அவருக்கு வர வர அதிகமாகிவிட்டது.

*ப. வீட்டுக்காரி :* வாருங்கம்மா! எப்போ வந்தது?

*மாத்ரோனு :* இப்போதானம்மா. கிராமத்திலிருந்து மகனைப் பார்க்க வந்தேன். வேறு விசேஷமில்லை.

*ப. வீட்டுக்காரி :* ஓஹோ! [*அநிஸ்யாவிடம் :*] அநிஸ்யா! உன்பாடு ரொம்பக் கஷ்டந்தான். வியாதியஸ்தனைவிட, அவனைக் கவனித்துக் கொள்பவர்களே அதிகமாகத் துன்பப்படுகிருர்கள் என்பது, உன் விஷயத்தில் உண்மையாய்ப் போயிற்று.

*அநிஸ்யா :* இதைவிட, எப்படியாவது ஒரு விதம் தீர்ந்து விட்டாலும் அலுப்பில்லை.

*ப. வீட்டுக்காரி :* ஆமாம்! அப்படித்தான் தோன்றும். ஒரு வருஷமாகச் சாகக்கிடந்தால் யாருக்குத் தான் தோன்ருது?

*மாத்ரோனு :* ஒரு விதவையாகவே காலங்கழிப்பது இதிலும் பார்க்க எவ்வளவோ நல்லது. என் காலெல்லாம் வலிக்கிறது. வயதாகிவிட்டதல்லவா? நிகிதா எங்கே?

அநிஸ்யா : வயலுக்குப் போயிருக்கிறுன். நீங்கள் உட்காருங்கள் அம்மா! நான் அடுப்பைப் பற்ற வைத்துத் தண்ணீர் கொதிக்க வைக்கிறேன். தேநீர் சுடச்சுடக் குடித்தால் அலுப்பு மாறிவிடும்.

மாத்ரோனு : [தரையில் உட்கார்ந்துகொண்டே:] உடம்பெல்லாம் வலிக்கிறது! சாமியாரைக் கூப்பிட்டு விடு. கடைசிக் காலத்தில் மனச் சாந்தியோடு சாகட்டும்.

அநிஸ்யா : நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம்.

மாத்ரோனு : நான் வரும்போது எங்கள் கிராமத்தில் ஒரு கல்யாணம்.

ப. வீட்டுக்காரி : என்னது! இந்த இளவேனிற் காலத்தில் கல்யாணமாவது? *

மாத்ரோனு : ஏழைகளுக் கல்லவா மதமும், சட்டமும். ஸைமன் நல்ல பணக்காரன். மரீனுவை விவாகம் செய்துகொண்டான்.

அநிஸ்யா : நல்ல அதிர்ஷ்டமாச்சே, அவளுக்கு!

ப. வீட்டுக்காரி : அவன் முதல் தாரமிழந்தவனல்லவா? குழந்தை ஏதாவதுண்டோ?

மாத்ரோனு : நாலு குழந்தைவேறு. நல்ல பெண் அவனுக்கு எங்கே கிடைக்கப் போகிறுள்? மரீனுவுக்கு ரொம்பச் சந்தோஷம் இந்த விஷயத்தில்.

---

* இலையுதிர் காலத்தில் தான் ருஷியக் குடியானவர்கள் விவாகங்களை நடத்துவார்கள். 'லென்ட்' விழாவின்போது விவாகம் நடத்துவது மத விரோதமாகும். ஈஸ்டர் விடுமுறையின்போது அறுவடை வேலை அதிகம்.

ப. வீட்டுக்காரி: ஊரிலே என்ன பேசிக் கொள்ளுகிருர்கள்? அவன் கொழுத்த பணக்காரனுச்சே!

மாத்ரோனு: அவர்களிருவரும் அன்னியோன்யமாகக் காலங் கழிக்கிருர்கள்.

ப. வீட்டுக்காரி: குழந்தை குட்டிகளுள்ள இரண்டாந்தாரக்காரனை எந்தப் பெண்தான் விவாகம் செய்துகொள்ளச் சம்மதிப்பாள்? இப்போது பார், எங்கள் வீட்டில்.........

[இடையே, தெருவிலிருந்தபடி அவள் கணவன் சத்தம் போட்டுக் கூப்பிடுகிருன்.]

கணவன்: மாவ்ரா, இங்கே என்ன பேச்சு! வீட்டுக்கு வா. மாட்டைக் கட்டி வைக்கோல் வைக்க வேண்டும்.

[வெளியே போகிருள்.]

மாத்ரோனு: [மாவ்ரா கூப்பிடு தூரம் போகும் வரை, தனது குரலைத் தாழ்த்தாது முன்போலவே பேசுகிருள்.] நல்ல காலம். அவள்பாடு சரியாய்ப் போய்விட்டது. இனிமேல் நிகிதாவை, இந்தக் கிழவர் 'கல்யாணம் பண்ணிக்கொள், கல்யாணம் பண்ணிக் கொள்' என்று புழு அரிப்பதுபோல் அரிக்க மாட்டார். [சட்டென்று குரலைத் தாழ்த்தி:] அதோ, அவள் போய் விட்டாள். [அநிஸ்யாவுக்கு மட்டும் கேட்கும்படியான மெல்லிய குரலில்:] உன் கணவனுக்கு...உம்...தேநீரில் நான் கொடுத்ததைப் போட்டுக் கொடுத்தாயா?

அநிஸ்யா : அதைப்பற்றிப் பேச வேண்டாம். அவர் சாகிற போது சாகட்டும். அந்தச் சூரணத்தினுல் ஒரு பிரயோசனமுங் கிடையாது. என் கெட்ட எண்ணம் என்னைச் சுற்றுகிறது. அது மட்டுந்தான் நானடைந்த நன்மை. அந்தச் சூரணத்தை ஏனம்மா என்னிடம் கொடுத்தீர்கள் ?

மாத்ரோனு : அதற் கென்ன? உறக்க மருந்தைக் கொடுப்பதி லென்ன ? அதனுல் ஒரு கெடுதியும் வராது.

அநிஸ்யா : அதைப்பற்றி நான் பேசவில்லை. மற்ருென்று கொடுத்தீர்களே, அதைப்பற்றி நினைக்கவே பயமா யிருக்கிறது.

மாத்ரோனு : எத்தனை தடவை கொடுத்திருக்கிருய் ?

அநிஸ்யா : இரண்டு தடவை.

மாத்ரோனு : என்ன தெரிந்தது ? ஏதாவது கெடுதலான குணம் தெரிந்ததா ?

அநிஸ்யா : நான் அவருக்குக் கொடுத்த தேநீரை கொஞ்சம் ருசி பார்த்தேன். கொஞ்சம் கசந்தது ; அவ்வளவுதான். அதைக் குடித்துவிட்டு, 'ஐயையோ, கசந்து கிடக்கிறது' என்று முகத்தைச் சுளித்துக் கொண்டார். 'நோயாளி வாய்க்கு எதுவுமே ருசியாயிராது' என்று சொல்லி அவரைச் சமாதானப்படுத்திவிட்டேன். இருந்தாலும், அவர் சொன்னவுடனே என் கை காலெல்லாம் நடுங்க ஆரம்பித்துவிட்டது.

மாத்ரோனு : அதைப்பற்றி அவ்வளவு சிந்தனை செய்யாதே.

4

அநிஸ்யா : நீங்கள் அந்தச் சூரணங்களைக் கொடுத்து எனக்கு இந்தப் பாவச்செயலைக் காட்டி யிருக்க வேண்டாம். சில வேளை, அந்த எண்ணமே என் நெஞ்சைப் பிளந்துவிடும் போலத் தோன்று கிறது. ஏனம்மா அதைக் கொடுத்தீர்கள்?

மாத்ரோனு : பயப்படாதே அம்மா. இதில் எனக் கென்ன பங்கு? அன்றைக்குத் தெருவிலே உன்னைப் பற்றிப் பேச்சு வந்தது; 'ஐயோ பாவம்! எவ்வளவு கஷ்டம் அவளுக்கு! புருஷன் ஓயாத நோயாளி. மூத்தாள் பெண்ணோ அசடு, அதோடுகூட, செவிடு. பேதை! இந்த நிலைமையில் ஒருத்தி என்னதான் செய்யத் துணிய மாட்டாள்?' என்று நான் சொன் னேன்.

அநிஸ்யா : அதை நான் மறுக்கவில்லை. என்னைப் போல நரக வேதனைப் படுகிறவள் வேறு யாராவது இருந்தால், உண்மையில் எதையும் செய்யத் துணிந்து விடுவாள்.

மாத்ரோனு : பேசிக் காலம் கழிக்க நேரமில்லை. பணமிருக்கு மிடத்தை எப்படியாவது கண்டுபிடித்து விடவேண்டும். அவனுக்கும் தேநீரைக் கொடுத்தாக வேண்டும்.

அநிஸ்யா : ஐயோ! என்ன செய்வதென்றே தெரியவில்லை. எனக்கு ஒரே பயமா யிருக்கிறது. அவர் சாகிற காலத்தில் சாகட்டுமே! அந்தப் பாவம் தேடிக்கொள்ள எனக்கு மனமில்லை.

மாத்ரோனு : [கடுமையாக :] அவன் பணமிருக் கும் இடத்தைச் சொல்லி விடட்டுமே! அவனோடு கூடவா கொண்டுபோகப் போகிறான்? அவன் இப்

படி யிருப்பது மட்டும் சரிதானு! பணமெல்லாம் ஒருவருக்கு மில்லாமல் வீணுகப் போக வேண்டு மாக்கும்! அது மட்டும் பாவமில்லையா? அவனுல் என்ன உபயோகம்? அவன் மீது இரக்கமெதற்கு?

அநிஸ்யா: கடவுளே! தலை கிறுகிறுவென்று சுற்றுகிறது. இந்தப் பேச்சை விடுங்களம்மா!

மாத்ரோனு: இதை ஏன் விடணும்! நீ செய்ய வேண்டியதைச் சொல்லி விடுகிறேன். அதன்படி நீ செய்தாக வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், அதை நினைத்து வாழ்க்கை முழுவதும் நீ வருந்த நேரும். அவன் தன் ரொக்க மெல்லாவற்றையும் தங்கையிடம் கொடுத்து விட்டு, உன்னைச் சந்தியில் நிறுத்தி விடுவான். இதை மறந்துவிடாதே!

அநிஸ்யா: ஆம்! இப்பொழுதுதான் அவனை அழைத்து வரச்சொல்லி ஆளனுப்பி யிருக்கிறுர். நான் போய்ப் பார்க்கிறேன்.

மாத்ரோனு: அவசியமில்லை. அடுப்பைப் பற்ற வைத்துத் தேநீர் போடு. அதிலே மருந்தைக் கலக்கி, அவனுக்குக் கொடுத்துவிட்டு, இரண்டு பேருமாய்ப் போய் மார்த்தா வருகிறுளா என்று பார்க்கலாம்.

அநிஸ்யா: ஏதாவது நேர்ந்துவிட்டால்!

மாத்ரோனு: இனிமேல் அதைப்பற்றி என்ன கவலை? நேரந் தாழ்த்துவதனுல் பிரயோசனமில்லை. பணத்தை நழுவ விட்டுவிட்டு, அப்புறம் அடித்துக் கொள்ளப் போகிறுயா? நான் சொல்கிறபடி செய்.

அநிஸ்யா: அப்படியானுல் சரி; இதோ போய் அடுப்பைப் பற்றவைக்கிறேன்.

மாத்ரோனு : அதுதான் சரி. சட்டென்று எல்லாம் முடியட்டும். [அநிஸ்யா வெளியே போக யத்தனிக்கிருள். மாத்ரோனு அவளை மறுபடியும் தன்னிடம் அழைக்கிருள்.] ஒரே ஒரு வார்த்தை ! இதைப்பற்றி நிகிதாவுக்கு எதுவுமே தெரியவேண்டாம். அவனுக்குச் சாமர்த்தியம் போதாது. மனதோ இளகிய மனது. ஒரு கோழிக் குஞ்சைக் கொல்லக்கூட அவனுக்கு மனம் வராது. அவனிடம் சொல்லி விடாதே.

[பீட்டர், கதவண்டை வருவதைக் கண்ட மாத்ரோனு, திடுக்கிட்டு அசையாது நின்று விடுகிருள். சுவரைப் பிடித்தபடியே முற்றத்துக்குள் நுழைந்த பீட்டர், மிக மெதுவான குரலில், அநிஸ்யாவை அழைக்கிருன்.]

பீட்டர் : அநிஸ்யா ! உனக்கென்ன, வர வரக் காது முழுச் செவிடாய்ப் போய்விட்டது போலிருக்கே ! அநிஸ்யா ! [மாத்ரோனுவைப் பார்த்ததும் :] உன்கூட இருப்பது யார் ? [வெளியே கிடந்த கட்டிலின்மீது உட்காருகிருன்.]

அநிஸ்யா : வெளியே ஏன் வந்துவிட்டீர்கள். படுக்கையை விட்டு எழுந்து ஏன் இப்படிப் புறப்பட்டு விட்டீர்கள் !

பீட்டர் : மார்த்தாவைக் கூப்பிட யார் போயிருக்கிறது ? சீக்கிரம் செத்தால் ரொம்ப நல்லது !

அநிஸ்யா : அகுலினுவுக்கு அங்கே போக நேரமில்லை. அவள் ஆற்றங்கரைக்குப் போயிருக்கிருள்.

வேலை ஒழிந்தவுடன் நானே போய் அவளை அழைத்துக்கொண்டு வருகிறேன்.

பீட்டர்: அன்னவை அனுப்பேன்! அவளெங்கே? என் காரியம் ரொம்ப நாளைக்கு ஓடாது!

அநிஸ்யா: உங்கள் தங்கையைக் கூப்பிடத் தான் அவளை அனுப்பியிருக்கிறேன்.

பீட்டர்: ஏன் இவ்வளவு நேரம்! எங்கேதான் போய்விட்டாள்?

அநிஸ்யா: எங்கே போய்த் தொலைந்தாளோ!

பீட்டர்: என் உடம்பெல்லாம் பற்றி யெரிவது போல எரிகிறது. மேலெல்லாம் ஊசியால் குத்துவது போல வலிக்கிறது. நீயோ, என்னைப் படுக்கையிலே கிடத்திவிட்டு வீட்டுக் காரியங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய். குடிக்க ஏதாவது கொண்டுவா. அன்னவையாவது இங்கே அனுப்பு.

அநிஸ்யா: இதோ வந்து விட்டாள்! [அன்ன ஓடி வருகிறாள்.] அப்பா கூப்பிடுகிறார். என்னவென்று கேள்! [அன்ன, பீட்டர் உட்கார்ந்திருக்கும் கட்டிலின் பக்கத்தில் போய், நிற்கிறாள்.]

பீட்டர்: நீ போய், உன் அத்தை மார்த்தாவை அழைத்துவா.

அன்ன: சரி!

பீட்டர்: கொஞ்சம் நில்லு. எனக்கு உடம்பு ரொம்ப மோசமாயிருக்கிறதென்று சொல்லு.

அன்ன: இதோ—. [ஓடிப்போகிறாள்].

மாத்ரோஞ : அநிஸ்யா! ஒன்றுவிடாமல் புரட்டி, வீடு முழுதும் தேடிவிடு. நான் அவனிடத்திலிருக்கிறதா என்று குறிப்பால் அறிய முயலுகிறேன்.

அநிஸ்யா : இப்பொழுது எனக்கு மிகவும் தைரியம் வந்துவிட்டது. காரணம், நீங்கள் என்னேடிருப்பதுதான். இதோ அடுப்பைப் பற்றவைக்கிறேன். [வீட்டினுள் நுழையும் போது பீட்டரைப் பார்த்து :] மாத்ரோஞ அம்மா வந்திருக்கிருள். அவளோடு கொஞ்சம் தேநீர் அருந்துகிறீர்களா ?

பீட்டர் : சரி. கொண்டுவா.

[அநிஸ்யா வீட்டிற்குள் நுழைகிருள். மாத்ரோஞ, பீட்டர் இருக்குமிடத்துக்கு வருகிருள்.]

பீட்டர் : சௌக்கியந்தானே ?

மாத்ரோஞ : [ருஷிய முறையில் வணங்குகிருள்.] உங்களுக்கு உடம்பு எப்படி யிருக்கிறது ? இன்னும் வியாதி சொஸ்தமாகவில்லை போலிருக்கிறதே ! எங்கள் வீட்டுக்காரர், உங்களைப்பற்றி ரொம்ப விசாரித்ததாகச் சொல்லச் சொன்ஞர். [மறுபடியும் வணங்குகிருள்.]

பீட்டர் : ரொம்ப நாள் ஓடாது.

மாத்ரோஞ : ஒன்றுமில்லாமல் மெலிந்துபோய் விட்டீர்கள்.

பீட்டர் : எனக்கு நாள் கிட்டிவிட்டது.

மாத்ரோஞ : நம் கையில் என்ன இருக்கிறது ? எல்லாம் கடவுள் இஷ்டப்படித்தான் நடக்கும். உங்

கள் மனைவி நல்ல புத்திசாலி. உங்களுக்கு ஒரு குறை வைக்கமாட்டாள். உங்களைப் புதைக்கிற இடத்தில் அழகிய கல்லறை யொன்று எழுப்புவாள்; உங்கள் ஆன்மாவின் சாந்திக்கு வேண்டிய பிரார்த்தனைகள் நடத்துவிப்பாள். நிலபுலங்களையும், மாடு கன்று களையும் என் பையன் பார்த்துக் கொள்ளுவான். உங்களுக்குக் கவலையே வேண்டாம்.

பீட்டர்: வீட்டு விஷயங்களைக் கவனித்துக் கொள்ள இங்கு யாருமில்லை. இவளுக்கு உறுதி போதாது. சில சமயங்களில் மூடத்தனமாக நடந்து கொள்ளுவாள். மூத்த பெண்ணுக்கும் சாமர்த்தியம் போதாது. வயதிலும், அறிவிலும் கொஞ்சம் சிறிசு தான். வீடுவாசல், நிலபுலங்களை யார் கருத்தோடு கவனித்துக்கொள்ளப் போகிறார்கள்? இதையெல் லாம் நினைக்காமல் எப்படி இருப்பது? [கண்ணீர் விடுகிறான்.]

மாத்ரோனா: ரொக்கமா யிருந்தால் யாருக்கா வது எழுதி வைத்து விடலாமே!

பீட்டர்: [கதவிடுக்கால், வீட்டினுள்ளிருக்கும் அநிஸ்யாவிடம்:] அன்னா போயிருக்கிறாளா?

மாத்ரோனா: [தனக்குள்:] அப்பா! எவ்வளவு ஞாபகம்!

அநிஸ்யா: [உள்ளிருந்தபடியே:] சொன்னவுட னேயே போய்விட்டாள். உள்ளே வாருங்கள். வாடையில் இருமல் அதிகமாகிவிடப் போகிறது.

பீட்டர்: கடைசித் தடவையாகக் கொஞ்ச நேரம் திறந்த வெளியில் சுகமாக உட்கார்ந்திருக்க நினைக்கிறேன். உள்ளே புழுக்கம் தாங்க முடிய

வில்லை. எப்படித் தாங்குவது இந்த வேதனையை! சீக்கிரம் போய் விடணும்.

மாத்ரோனு: கடவுளாக இஷ்டப்பட்டு மனிதர்களை அழைத்துக் கொள்வாரே தவிர உங்களிஷ்டம் போல அவர் உங்களை அழைத்துக் கொள்ள மாட்டார். பிறப்பும், இறப்பும், அவன் ஆணைப்படியே நடக்கும். அவனருள் இருந்தால், உங்கள் வியாதி சொஸ்தமாகும்.

பீட்டர்: இன்றைக்கே நான் இறந்து விடுவேன் என்று எனக்குத் தோன்றுகிறது. [பின்னாலே சாய்ந்து, முகத்தைக் கைகளால் மூடிக் கொள்ளுகிறான்.]

[அநிஸ்யா, வாசல் வழியாக பீட்டர் இருக்குமிடம் வருகிருள். மாத்ரோனு வெகு தூரம் விலகிச் சென்று நின்று கொண்டு, விரல்களினுல் சைகை செய்து அநிஸ்யாவை அழைக்கிருள்.]

மாத்ரோனு: என்ன? [அநிஸ்யா கீழிறங்கி, மாத்ரோனுவின் பக்கத்தில் வந்து நிற்கிருள்.]

அநிஸ்யா: அங்கே காணவில்லை.

மாத்ரோனு: எல்லா இடங்களிலும் பார்த்தாகிவிட்டதா? தரையிலெல்லாம்?

அநிஸ்யா: இல்லை. அன்றைக்கு, குதிரை லாயத்தில் என்னவோ செய்து கொண்டிருந்தார். அங்கே போய்ப் பார்க்கிறேன்.

மாத்ரோனு: சீக்கிரம்; போ. இவன் பாடு இன்றோடு தீர்ந்து போகும். முகத்தில் களை மாறிவிட்டது.

கைநகங்கள் நீலம் பூத்துப் போய் விட்டன. அடுப்பில் என்ன இருக்கிறது?

அநிஸ்யா: ஜலம் கொதிக்கிறது.

[முற்றத்து வெளிக் கதவின் புறமாக நிகிதா வருகிறுன். பீட்டரை அவன் காணவில்லை.]

நிகிதா: [மாத்ரோனுவைப் பார்த்து:] எப்போ அம்மா வந்தாய்? ஊரிலே ஏதாவது விசேஷ முண்டா?

மாத்ரோனு: கடவுளருளால் எல்லோரும் சுகம்.

நிகிதா: எஜமான் எப்படி யிருக்கிறுர்?

மாத்ரோனு: வாயை மூடு! [மெதுவான குரலில்:] அதோ கட்டிலின்மீது உட்கார்ந்திருக்கிறுர்.

நிகிதா: அவர் பாட்டுக்கு இருக்கட்டும்.

பீட்டர்: [கண்ணைத் திறந்து:] நிகிதா, நிகிதா, இங்கே வா.

[நிகிதா பீட்டர் அருகில் வருகிறுன். அநிஸ்யாவும், மாத்ரோனுவும் மெதுவான குரலில் பேசிக்கொள்ளுகிறுர்கள்.]

பீட்டர்: ஏன் இவ்வளவு சிக்கிரம் வந்து விட்டாய்!

நிகிதா: உழுது முடிந்தது. இனி என்ன வேலை?

பீட்டர்: பாலத்துக்கடுத்த வயலை உழுது விட்டாயா?

நிகிதா: எவ்வளவு தூரமிருக்கிறது! எப்படிப் போவது அங்கே?

பீட்டர்: ரொம்ப தூரமா! சீக்கிரம் போ. அதை உழுது விட்டு வா!

[அநிஸ்யா ஓரமாக நின்று ஒட்டுக் கேட்கிருள்.]

மாத்ரோனு: அப்பா நிகிதா, எஜமானே உன் தகப்பஞராகவே கருதி உழைக்க வேண்டும். அவ ருக்கு உடம்பு சரியாயில்லே, பார். உன் தோலே உரித்து அவர் காலுக்குச் செருப்பாய்ப் போட்டா லும், அவர் செய்த உபகாரங்களுக்குச் சரியாகாது, அப்பா.

பீட்டர்: நடுவதற்காக வாங்கி வைத்திருக்கும் உருளேக் கிழங்கை எடுத்து வா. இவர்கள் தரம்வாரி யாகப் பிரிக்கட்டும். நாளேக்கே நட்டு விடலாம்.

அநிஸ்யா: [தனக்குள்:] எல்லோரையும் ஏதாவது வேலேயாக அனுப்பி விடுகிருர். தமது ஆடையில்தான் பணத்தை மறைத்து வைத்துக் கொண்டிருக்கிருர் போலிருக்கிறது! எங்கேயோ மறைத்து வைக்கவே எல்லோரையும் வெளியில் அனுப்பப் பார்க்கிருர்.

பீட்டர்: நடுவதற்குள் எல்லாம் அழுகி விடப் போகிறது. என்ன மெதுவு! [எழுந்திருக்கிருன்.]

[மாத்ரோனு ஓடிப் போய், பீட்டர் தடு மாறிக் கீழே விழாதபடி பிடித்துக் கொள்ளுகிருள்.]

மாத்ரோனு: உள்ளே போகணுமா?

பீட்டர் : ஆமாம். [சற்றே திரும்பி :] நிகிதா !

நிகிதா : [கோபாவேசமாய் :] என்ன !

பீட்டர் : நான் உன்னை மறுபடியும் பார்க்கப் போவதில்லை. இன்றே இறந்து போய் விடுவேன் போலிருக்கிறது. நான் உனக்கு ஏதாவது பிழை செய்திருந்தால், கிறிஸ்து சாட்சியாக என்னை மன்னித்துவிடு. சொல்லிலோ செயலிலோ என்னை யறியாமல் எத்தனையோ தவறுகள் செய்திருக்கலாம். மன்னித்துவிடு.

நிகிதா : மன்னிப்பதற்கு நீங்கள் என்ன செய்துவிட்டீர்கள் ? நானே ஒரு பாபியாயிற்றே.

மாத்ரோனு : * ருஷிய வழக்கப்படி பதில் சொல்.

பீட்டர் : என் மீது கருணை கொள். மன்னித்து விடு ! [கண்களில் நீர் ததும்புகிறது.]

நிகிதா : [உணர்ச்சியோடு :] கடவுள் உங்களை மன்னிப்பார். நீங்கள் ஒரு தடவைகூட என் மனத்துக்கு வருத்தம் உண்டாகும்படி நடந்துகொண்டதில்லை. மன்னிக்கமுடியாத பெருந்தவறு நான் உங்களுக்குச் செய்திருக்கலாம். நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். [அழத் தொடங்குகிறுன். பீட்டர் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே, மாத்ரோனுவின் உதவியால் வீட்டிற்குள் போகிறுன்.]

அநிஸ்யா : மார்த்தாவுக்கு ஆளனுப்பியதற்கு இதுதான் காரணம். [நிகிதாவின் அருகே சென்று :]

---

* உடல்நிலை மோசமானவுடன் நன்னுடன் பழகும் எல்லோரிடத்தும் மன்னிப்புக் கோருவது ருஷிய வழக்கம். நிகிதா முதலில் சொன்ன மறுமொழி மனக் குழப்பத்தினுல் விளைந்தது. ‘கடவுள் மன்னிப்பார்’ என்ற இரண்டாவது பதில் சரியானது.

பணம் தளத்துக்குக் கீழ் இருக்கிறது என்ருயே? வேண்டியமட்டும் தேடியாகிவிட்டது. ஒன்றையும் காணவில்லை.

நிகிதா: [சற்றுநேரம் பதிலளிக்காமல் அழுத வண்ணமாயிருக்கிருன்.] அவர் எனக்கு எப்பொழுதும் நன்மையே செய்துவந்திருக்கிருர். நானே அவரது சோற்றைத் தின்றுகொண்டே அவருக்குத் துரோகம் செய்திருக்கிறேன்.

அநிஸ்யா: போதும், போதும்! பணத்தைப் பார்த்தாயா?

நிகிதா: [கோபமாய்:] எனக்கு எப்படித்தெரியும்? நீயே தேடிப்பார்.

அநிஸ்யா: நீ ஏன் இப்படிக் கோழையாகிவிட்டாய்?

நிகிதா: அவர் அழுததைப் பார்த்தாயா? அவர் முகத்தைப் பார்த்தால் பேயும் மனமிரங்குமே!

அநிஸ்யா: அவர்மேல் இரக்கமா? உன் இரக்கத்தைப் பெறுவதற்கும் யாராவது முளைத்துவிடுகிருர்கள்! இவ்வளவு நாள் அவர் உன்னை ஒரு மிருகம் போல நடத்திவந்தாரே! இப்பொழுதுகூட உன்னை வைது வயலுக்குப் போகச்சொன்னுரே. அதெல்லாம் உனக்கு மறந்துபோய் விட்டதா? என்மீது மட்டும் உனக்கு இரக்கமேயில்லையே?

நிகிதா: உனக்கு என்ன வந்துவிட்டது? எதற்காக உன்மீது நான் இரக்கங்கொள்ள வேண்டும்?

அநிஸ்யா: பணத்தை எங்கேயாவது ஒளித்து வைத்துவிட்டு, அவர் வாயைப் பிளந்துவிட்டால்...?

நிகிதா : அப்படியொன்றும் நேராது.

அநிஸ்யா : நிகிதா, அவர் தங்கையை அழைத்து வர அன்னுவை அனுப்பியிருக்கிருர். அவள் வந்தால், நிச்சயமாக அவளிடம் ரொக்கத்தை யெல்லாம் கொடுத்துவிடுவார். அப்புறம், நம்முடைய பாடு அதோ கதிதான். பணம் போனபிறகு நீயும் நானும் எப்படி உயிர் வாழ்வது? நம்மை வீட்டைவிட்டுத் துரத்திவிடுவார்கள். நேற்றைக்கு லாயத்தின் புறமாக இவரைக் கண்டதாகச் சொன்னுயே? அங்கே கொஞ்சம் தேடிப்பாரேன்!

நிகிதா : லாயத்திலிருந்து வருவதை நான் பார்த்தேன். ஆனல், எங்கே பணத்தை ஒளித்து வைத்திருக்கிருர் என்பதை நான் எப்படிக் கண்டேன்?

அநிஸ்யா : அட கடவுளே! நானே போய் ஒரு தடவை பார்க்கிறேன்.

[மாத்ரோனு குடிசையிலிருந்து வெளியே வந்து படிகளேக் கடந்து, நிகிதாவும் அநிஸ்யாவும் இருக்குமிடம் வருகிருள்.]

மாத்ரோனு : [அநிஸ்யாவைத் தனியே அழைத்து :] எங்கேயாவது போய்விடாதே! அவனிடம்தான் பணமிருக்கிறது. ஒரு நூல்கயிற்ருல் பணமுடிப்பைக்கட்டி, தன் கழுத்தில் மாட்டிக் கொண்டிருக்கிருன். அவனேக் கைத்தாங்கலாக அழைத்துச் செல்லும்போது, அதைத் தொட்டுப் பார்த்தேன்.

அநிஸ்யா : அப்படியா! அப்புறம்!

மாத்ரோனு : ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். மார்த்தா வந்துவிட்டால், உன்பாடு திண்டாட்டந் தான்.

அநிஸ்யா : அவள் இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்துவிடுவாள். அவரும், அவளுக்குக் கொடுக்கத் தான் பணத்தை இப்படித் தன்னுடனேயே வைத்துக் கொண்டிருக்கிருர். இப்போது நான் என்ன செய் கிறது ?

மாத்ரோனு : [அவள் காதோடு :] நான் சொல் வதைக் கேள். ஜலம் தளதளவென்று கொதிக்கிறது. கொஞ்சம் தேயிலையைப் போட்டுக் கொண்டுவா. பொட்டலத்தில் பாக்கியிருப்பது பூராவையும் அதிலே கலந்து உடனே கொடுத்துவிடலாம். அவன் குடித்த பிறகு, பணத்தை மெல்ல எடுத்துக் கொள்ளலாம். அவனல் கண்டு பிடிக்கவே முடியாது. அதைப்பற்றிப் பயமே வேண்டாம்.

அநிஸ்யா : எனக்குப் பயமாயிருக்கிறதே !

மாத்ரோனு : பேசுவதற்கு இது சமயமில்லை. திடமாயிரு. மார்த்தா வருகிருளா என்று நான் பார்த் துக் கொள்ளுகிறேன். பின்வாங்காதே. பணத்தை எடுத்து இங்கே கொண்டுவா. நிகிதா உடனே எங் கேயாவது ஒளித்து வைத்துவிடுவான்.

அநிஸ்யா : என்ன செய்வது ? உம்...!

மாத்ரோனு : நான் சொல்வது போலச் செய். நிகிதா !

நிகிதா : என்ன !

மாத்ரோனு : இப்படி வந்து உட்கார்.

நிகிதா : [முணு முணுத்துக்கொண்டே :] இவர்கள் என்ன செய்ய நினைத்திருக்கிறார்களோ? கூடிக் கூடி வம்பளக்கிறார்கள். யாரையுமே கலங்க அடித்து விடுவார்கள். ...நான் போய் உருளைக்கிழங்கு மூட்டையை எடுத்து வருகிறேன்.

மாத்ரோனா : [சட்டென்று கையைப் பிடித்து நிறுத்துகிறாள்.] இங்கே நில்!

[அன்னா வருகிறாள்.]

அநிஸ்யா : என்ன ?

அன்னா : வீட்டிலிருந்தாள். இதோ பின்னோடே வருகிறாள்.

அநிஸ்யா : வருகிறாளாமே! என்ன செய்வது!

மாத்ரோனா : நான் சொல்லுகிறபடி செய். இன்னும் எவ்வளவோ நேரமிருக்கிறது.

அநிஸ்யா : எனக்குப் புத்தி கலங்கிவிடும் போலிருக்கிறது. அன்னா! நீ போய்க் கன்றுக்குட்டிகளைக் கட்டிவிட்டு வா, அம்மா! இல்லாவிட்டால் எங்கேயாவது ஓடிவிடும். [அன்னா போகிறாள். அவள் பின்னாலேயே அநிஸ்யா தலையை இரு கைகளாலும் இறுகப் பற்றிக்கொண்டு வீட்டிற்குள் போய் விடுகிறாள்.]

மாத்ரோனா : [நிகிதாவின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு :] உன் பிற்கால வாழ்க்கையைப் பற்றிக் கொஞ்சம் பேசவேண்டும்.

நிகிதா : என்ன ?

மாத்ரோனா : நீ எப்படி வாழ்வது என்பதைக் குறித்து.

நிகிதா : எல்லோரும் வாழவில்லையா? அதைப் போல நானும் வாழ்ந்துவிட்டுப் போகிறேன்.

மாத்ரோனு : கிழவன் வாழ்க்கை இன்ருேடு முடியப்போகிறது.

நிகிதா : அப்படியானுல், கடவுள் அவரது ஆன் மாவுக்குச் சாந்தியளிக்கட்டும்! அதைப்பற்றி எனக் கென்ன வந்தது?

மாத்ரோனு : [பேசும்பொழுது, அவள் கண்கள் குடிசையின் திறந்த கதவை நோக்கிய வண்ணமிருக் கின்றன.] உயிரோடு வாழ எண்ணமுள்ளவர்கள் பிற்கால வாழ்வைப்பற்றி நினையாமல் எப்படி இருப் பது? இதற்கு ரொம்ப யுக்தி வேண்டும். உனக்காக நான் எவ்வளவு சங்கடப் பட்டிருக்கிறேன், தெரியுமா?

நிகிதா : எனக்காக, அப்படி என்ன சங்கடப் பட்டுவிட்டாய்?

மாத்ரோனு : எல்லாம் உன் பிற்கால வாழ்வைக் குறித்துத்தான். உனக்குக் கவலையே யில்லை. இப்படி யிருந்தால் என் முயற்சியெல்லாம் வீணுய்ப் போய் விடும். வக்கீல் இவான் மோஸீச் இருக்கிருரே, உனக்குத் தெரியுமல்லவா? நேற்று அவரைப் போய் பார்த்தேன். கொஞ்ச நேரம் ஊர்ப்பேச்செல்லாம் பேசினேம். பிறகு கேட்டேன் : ‘ இதைக் கேளுங்கள். ஒரு குடியானவன். முதல்தார மிழந்தவன். இரண்டா வது கலியாணம் செய்து கொண்டிருக்கிருன். முதல் தாரத்தின்மூலம் ஒரு குழந்தை ; இரண்டாவது தாரத் தின் மூலம் ஒரு குழந்தை. இரண்டும் பெண் குழந்தை கள். வேறு ஆண் சந்ததி கிடையாது. அந்தக் குடி

யானவன் இறந்துபோகிருன் என்று வைத்துக்கொள்வோம். வேற்று மனிதன் ஒருவன், இறந்துபோனவனுடைய பெண்களை வேறு யாருக்காவது கட்டிக்கொடுத்துவிட்டு, தான் அவனுடைய இரண்டாந்தாரத்தைக் கலியாணம் பண்ணிக்கொண்டால், அவன் சொத்தையெல்லாம் அடைய முடியுமா?' என்று கேட்டேன். 'நன்ருக முடியும். ஆனல், இதில் சங்கடம் அதிகமுண்டு. பணமிருந்தால் எதையும் சாதித்துவிடலாம். இல்லாவிட்டால் உபயோகமில்லை' என்று அவர் சொல்லிவிட்டார்.

நிகிதா: [வாய்விட்டுச் சிரிக்கிருன்.] இது யாருக்குத்தான் தெரியாது? ஆமாம், எதற்கும் பணந்தானே வேண்டியிருக்கிறது?

மாத்ரோனு: உன்னிடம் எல்லாவற்றையும் மனம்விட்டுச் சொல்லிவிட்டேன். இன்னும் கேள். உன் பெயரையும் இந்தக் கிராமத்தின் ஜனசங்கியைக் கணக்கில் சேர்க்கவேண்டுமாம். அதற்குக் கொஞ்சம் செலவாகுமாம். நாட்டாண்மைக்காரர்களுக்குக் கொஞ்சம் ஏதாவது சமர்ப்பிக்கவேண்டுமாம். இதைப் பார். [தனது கைக்குட்டையை அவிழ்த்து, கசங்கிய ஒரு காகிதத்தை எடுத்து நிகிதாவிடம் கொடுக்கிருள்.] இந்த அறிக்கையில் அவர்கள் கையெழுத்தை வாங்கிப் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டுமாம். அதில் என்ன எழுதியிருக்கிறது? வாசித்துப்பார்.

நிகிதா: [வாசித்துப் பார்த்து:] 'எனக்குச் சொந்த ஊர் இதுதான்' என்பதற்கு ஒரு யாதாஸ்து இது. இதில் நாட்டாண்மைக்காரர்கள் கையெழுத்துப் போடவேண்டும்.

மாத்ரோனு : 'பணத்தை முதலில் தேடிக்கொள். ரொக்கப் பணமில்லாவிட்டால் எதுவும் நடக்காது' என்று வக்கீல் தீர்மானமாய்ச் சொல்லிவிட்டார். ஆகவே, ரொக்கத்தை முதலில் கைப்பற்றவேண்டும்.

நிகிதா : எனக்கென்ன? பணம் அவளுடையது. அவள் ஏதாவது செய்துவிட்டுப் போகிருள்.

மாத்ரோனு : கேவலம் ஒரு பெண்ணுக்கு என்ன யுக்தி தெரியப்போகிறது? பணத்தை அவள் கைப்பற்றிக் கொள்வாள். அதற்கப்புறம் நடக்க வேண்டியவற்றை நீதான் கவனிக்க வேண்டும். எப்படியாளுலும், நீ ஆண்பிள்ளை யல்லவா? நீ எங்கேயாவது ஒளித்து வைக்கலாம்; மற்ற விஷயங்களையும் கவனித்துக் கொள்ளலாம்.

நிகிதா : அடடா! பெண் மனம் எப்படியெல்லாம் திட்டம் போடுகிறது!

மாத்ரோனு : திட்டமென்ன திட்டம்! பணத்தை உன் கைக்குள் எப்படியாவது சிக்கவைத்துக்கொள். பிற்காலத்தில், அநிஸ்யா ஒரு விதமாக அலட்சியம் பண்ண ஆரம்பித்தால், நீ அவளை அடக்கலாம்.

நிகிதா : நீங்கள் நாசமாய்ப் போக! ஒரு இழவும் எனக்கு வேண்டாம். எனக்கு வேலையிருக்கிறது; போகிறேன்.

[அநிஸ்யா, இரத்தமற்று வெளுத்து, களையிழந்த முகத்தோடு, குடிசையிலிருந்து விழுந்தடித்து ஓடி வருகிருள்.]

அநிஸ்யா : நீங்கள் சொன்னபடியே, அவர் கழுத்தில் போட்டிருந்த நூல் கயிற்றில்தான் தொங்

கிக்கொண் டிருந்தது. இதோ! [முன்தானையில் மறைத்து வைத்திருந்த பணமுடிச்சை எடுக்கிருள்.]

மாத்ரோனு: உடனே அவனிடத்தில் கொடுத்து விடு. எங்கேயாவது மறைத்து வைக்கட்டும்.

நிகிதா: ஆம்! இங்கே கொடு.

அநிஸ்யா: இல்லே, இல்லே. நானே எங்கே யாவது மறைத்து வைக்கிறேன். [வெளிக் கதவை நோக்கி நடக்கிருள்.]

மாத்ரோனு: [அநிஸ்யாவின் கையைப் பிடித்து நிறுத்தி:] எங்கே போகிருய்? தெருவில் மார்த்தா வருகிறது உனக்குத் தெரியவில்லேயா? அவனிடம் கொடு. அவனுக்கு எல்லாம் தெரியும்.

அநிஸ்யா: [திகிலடைந்து, ஒன்றும் ஓடாமல் நின்று விடுகிருள்.] ஐயையோ!

நிகிதா: எங்கேயாவது பத்திரப்படுத்தி வைக் கிறேன். இங்கே கொடு.

அநிஸ்யா: எங்கே வைக்கப் போகிருய்? எனக்கும் தெரியட்டும்.

நிகிதா: [நகைத்துக் கொண்டே:] உனக்குப் பயமா என்ன?

[வெளிக் கதவைத் திறந்து கொண்டு அகுலினு நுழைகிருள்.]

அநிஸ்யா: [அகுலினுவைக் கண்டதும் பணத்தை நிகிதாவிடம் கொடுத்து விடுகிருள்.] நிகிதா, ஜாக்கிரதை.

நிகிதா : ஏன் பயப்படுகிறுய்? யாரும் கண்டு பிடிக்க முடியாத இடத்தில் மறைத்து வைக்கிறேன். இங்கே கொடு.

[வெளியே போகிறுன்.]

அநிஸ்யா : [பயத்தின் அறிகுறிகள் முகத்தில் தோன்ற :] எங்கேயாவது தெரியாதபடி......!

மாத்ரோனு : [இடைமறித்து :] சரி; அவனுக்கு எப்படி யிருக்கிறது?

அநிஸ்யா : உயிர் போய்விட்டதுபோல் இருக்கிறது. இதை அவர் கழுத்திலிருந்து கழற்றும்போது, உடல் அசையவே இல்லே.

மாத்ரோனு : அதோ அகுலினு வருகிறுள். உள்ளே போ.

அநிஸ்யா : சிரமப் பட்டது நான். லாபமடைந்தது நிகிதா.

மாத்ரோனு : சரி சரி, உள்ளே போ. இதோ மார்த்தா வந்துவிட்டாள்.

அநிஸ்யா : அவனே முழுதும் நம்பி யிருக்கிறேன். அப்புறம் நடக்கிறது நடக்கட்டும். [உள்ளே போகிறுள்.]

[அகுலினுவுக்கு எதிர்ப்புறமாக மார்த்தா வருகிறுள். இருவரும் சந்திக்கிறுர்கள்.]

மார்த்தா : [அகுலினுவைப் பார்த்து :] அண்ணுவுக்கு உடம்பு எப்படி யிருக்கிறது? ரொம்ப அதிகமா யிருக்கிறதா?

அகுலினு: நான் ஆற்றங்கரைக்குப் போயிருந்தேன். எனக்குத் தெரியாதே!

மார்த்தா: [மாத்ரோனுவைச் சுட்டிக் காட்டி:] இது யார்?

மாத்ரோனு: நான் நிகிதாவின் தாயார். என் சொந்தக் கிராமம் 'ஸீவோ' என்பது. உங்கள் அண்ணுவுக்கு எல்லாம் ஒடுங்கிவிட்டது. அவரே வெளியே வந்து, உனக்கு ஆளனுப்பச் சொன்னுர். இதுவரை உயிர் இருக்குமோ என்னவோ? சந்தேகந் தான்.

அநிஸ்யா: [குடிசையி னுள்ளிருந்து பலத்த கூச்சல்போட்டு அழுதுகொண்டு வெளியே ஓடி வருகிருள். கூடத்திலிருக்கும் பந்தற்காலைப் பற்றிக் கொண்டு ஓலமிட்டு அழுகிருள்.] யாரிருக்கிருர்கள் எனக்கு?............இப்படி விட்டுவிட்டு............ கண்ணை மூடிவிட்டாரே..........இனி எப்படி......... உயிர் வாழப்போகிறேன்.........

[பக்கத்து வீட்டுக்காரி மாவ்ரா வெளிக் கதவின் வழியே முற்றத்தினுள் நுழைகிருள். மாத்ரோனுவும், மாவ்ராவும், அநிஸ்யாவைக் கைத்தாங்கலாக உள்ளே அழைத்துச் செல்ல முயலுகிருர்கள். அகுலினுவும், மார்த்தாவும் வீட்டுக்குள் நுழைகிருர்கள். தெருவில் ஒரு பெரிய கூட்டம் கூடி விடுகிறது.]

கூட்டத்திலிருந்து ஒரு குரல் : பிராணன் போய் எவ்வளவு நேரமிருக்கும் ?

மாத்ரோனு : [தன் சட்டையின் * முன்கையை மடக்கிவிட்டுக் கொள்ளுகிருள்.] இப்பொழுதுதான் ; ஐந்து நிமிஷமிருக்கும்.

இரண்டாம் அங்கம் முற்றும்.

---

* ருஷியப் பெண்கள் முழுக்கைச் சட்டை அணிவது வழக்கம்.

## மூன்றும் அங்கம்

[இரண்டாவது அங்கத்தில் சொல்லப் பட்ட சம்பவங்கள் நடந்தேறி ஒன்பது மாதமாகி விட்டது. பனிக்காலம். முதல் அங்கம் நடந்த அதே காட்சி. எளிய உடையிலே, அநிஸ்யா தறியில் நெய்துகொண்டிருக்கிருள். அன்ன, கணப்போரம் உட்கார்ந்து கொண் டிருக்கிருள். மிட்ரிக் என்ற வயதான குடியானவன் மெல்ல மெல்ல நடந்து வந்து, தன் உடைகளைக் களைகிருன்.]

*மிட்ரிக் :* எஜமான் இன்னும் வரவில்லையா?

*அநிஸ்யா :* என்னது?

*மிட்ரிக் :* நிகிதா, வெளியே போனவர் இன்னும் வரவில்லையா என்று கேட்டேன்.

*அநிஸ்யா :* இல்லை.

*மிட்ரிக் :* சரிதான் கள்ளுக்கடைப் பக்கம் போய்விட்டார் போலிருக்கிறது!

*அநிஸ்யா :* உன் வேலை யெல்லாம் முடிந்து விட்டதா?

*மிட்ரிக் :* இதென்ன கேள்வி? எந்த நாளாவது வேலையைப் பாதியில் போட்டுவிட்டு நான் வந்த-

துண்டா? பூரா வேலையும் முடிக்காமல் வேறு காரியம் பார்க்கிற வழக்கம் சின்ன வயதிலிருந்து எனக்குக் கிடையாதே! உம்,... அவர் வர நேரமாகி விட்டதே!

*அநிஸ்யா*: [அருவருப்புத் தோன்ற:] என்ன அவசரம் வீட்டில்? அவருக்கோ பணமிருக்கிறது. அந்தப் பெண்ணோடு ஆடிப்பாடிக் கேளிக்கையாகக் காலம் போக்கிவிட்டு, சாவகாசமாக வீடு திரும்புவார். கேட்பதற்கு நாம் யார்?

*மிட்ரிக்*: சந்தோஷமாகக் காலம் போக்குவதில் என்ன தடை? பணமிருந்தால் போதாதா? அவரோடு அகுலினுவுக்கு என்ன வேலை? அவள் என் பட்டணத்துக்குப் போயிருக்கிறுள்?

*அநிஸ்யா*: அவளைப் போய்க் கேள். அவளை எந்தப் பிசாசு பிடித்திருக்கிறது என்பதை நான் என்ன கண்டேன்?

*மிட்ரிக்*: பணம் மாத்திரம் இருந்தால் போதும். பட்டணத்தில் கிடைக்காத சாமான் இல்லை.

*அன்னு*: அம்மா! அவர் வெளியே போகும் போது எனக்கு ஒரு நல்ல சிற்றுடை வாங்கிக் கொண்டு வருவதாகச் சொன்னுர். அவர் வெளியே போனபோது நீ பார்த்தாயோ? புதுத்துணியெல்லாம் கட்டிக்கொண்டு, வழக்கத்துக்கு மாருக அவளும் குலுக்கிக் குலுக்கி நடந்து போனதை நீ பார்க்கவில்லையே?

*அநிஸ்யா*: மானங்கெட்டவள்! அடக்க ஒடுக்கம் வேண்டாமா பெண்ணுக்கு?

*மிட்ரிக் :* வெட்கப்பட்டால் இந்தக் காலத்தில் என்ன நடக்கும்? பணமிருக்கிறபோது, வெட்கம் மானம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, கூத்தாட்டத்தில் பொழுதுபோக்கினுல், என்ன, குடியா முழுகிப் போய்விடும்?......சமையல் ஆகவில்லையா இன்னும்? [அநிஸ்யா விடை யளிக்கவில்லை.] கொஞ்சநேரம் போகட்டுமே! [கணப்போரம் போகிருன்.] அப்பா! கடவுளே! [நீட்டி நிமிர்ந்து படுத்துக்கொள்ளுகிருன்.]

[மாவ்ரா வருகிருள்.]

*மாவ்ரா :* இன்னும் வரவில்லை போலிருக்கே?

*அநிஸ்யா :* ஊஹூம்! [இல்லையென்பதற் கறிகுறியாகத் தலையை அசைக்கிருள்.]

*மாவ்ரா :* நேரமாச்சே! ஊருக்கு வெளியேயுள்ள சத்திரத்தில் தங்கிவிட்டாரோ என்னவோ? பட்டணத்திலிருந்து வந்த வண்டிகளெல்லாம் சத்திரத்து வாசலில் நிற்பதாக என் தங்கை சொன்னுள்.

*அநிஸ்யா :* அன்னு!

*அன்னு :* என்ன?

*அநிஸ்யா :* சத்திரத்துக்குப் போய்ப் பார்த்து வா. ஒருவேளை குடிவெறியில் அங்கேயே இறங்கி விட்டாரோ என்னவோ?

*அன்னு :* [கணப்போரத்தைவிட்டு வந்து :] சரி.

*அநிஸ்யா :* இல்லாவிட்டால் சத்திரத்தில் இவருக்கு என்ன வேலை? ஏதாவது வேலையிருக்கிறது போலப் பாவனை செய்துவிட்டு, இவளையும் அழைத்துக்கொண்டு எங்கேயாவது போய்விடுகிருர்.

மாவ்ரா: இவர் நடத்தை யொன்றும் எனக்குச் சரியாகப் புரியவில்லை. [மௌனம்.]

அன்னு: [கதவண்டை நின்றுகொண்டு:] அவர் அங்கிருந்தால் நான் என்ன சொல்வது?

அநிஸ்யா: இருக்கிருரா என்று பார்த்து விட்டு வா. அது போதும்.

அன்னு: இதோ கண்மூடித் திறப்பதற்குள் வந்து விடுகிறேன். [அன்னு போகிருள். நீண்டநேரம் மௌனம்.]

மாவ்ரா: அகுலினுவைக் கலியாணம் பேச யாரோ வந்தார்களாமே! நிஜந்தானு?

அநிஸ்யா: [தறியைவிட்டு எழுந்து வந்து மேஜையின் மேல் உட்காருகிருள்.] பக்கத்துக் கிராமம் ஒன்றிலிருந்து யாரோ வந்தார்கள். அவள் சமாசாரம் இலேசாக அவர்கள் காதில் விழவே, வேண்டாமென்று பேச்சை விட்டுவிட்டார்கள்.

மாவ்ரா: ஸீவோவிலிருந்து யாரோ வந்தார்களாமே?

அநிஸ்யா: அந்தப் பேச்சும் இப்படித்தான். இடையிலே நின்றுபோயிற்று.

மாவ்ரா: அகுலினுவுக்குக் கலியாணமாகிற வயசாகவில்லையா? சீக்கிரம் யாரையாவது பார்த்துக் கட்டிக் கொடுத்துவிடு.

அநிஸ்யா: இந்த வீட்டைவிட்டு அவளை வெளியேற்ற நேரம் பார்த்துக்கொண்டுதா னிருக்கிறேன். இவளுக்குக் கலியாணம் பண்ணிவைத்து வெளியே

அனுப்பிவிட அவருக்கும் மனமில்லை; வெளியே போக அவளும் தயாராயில்லை. அவளைப் பிரிந்து அவர் எப்படி யிருப்பார்?

மாவ்ரா: அட சனியனே! அவர் அவளுக்குத் தகப்பனர் முறையல்லவா?

அநிஸ்யா: எல்லோரும் சேர்ந்து என்னை அடியோடு ஏமாற்றி விட்டார்கள். நான் கொஞ்சங் கூடச் சந்தேகம் கொள்ளாமல், அவரைக் கலியாணம் செய்துகொண்டு விட்டேன். அதற்கு முன்னமேயே, அகுலினவும் அவரும், ஒருவர் மனத்தை மற்றொருவர் அறிந்திருப்பார்கள் போலிருக்கிறது.

மாவ்ரா: இப்படியும் எங்கேயாவது நடக்குமா?

அநிஸ்யா: எல்லாவற்றையும் என்னிடம் மறைக்க முயலுகிறார்கள். அப்பா! எனக்கு இந்த வாழ்க்கையே வெறுத்துப் போய் விட்டது! அவரைக் காதலித்ததெல்லாம் பாழ் என்றுதான் தோன்றுகிறது.

மாவ்ரா: இதைச் சொல்லவேண்டுமா, என்ன?

அநிஸ்யா: என் இதயம் நொந்து புண்ணுகி விட்டது. உணர்ச்சியுள்ளவள் ஒருத்தி இதையெல்லாம் கண்டு எப்படிச் சகிப்பது?

மாவ்ரா: இப்பொழுது அடிக்கக்கூட ஆரம்பித்து விட்டாராமே?

அநிஸ்யா: அதையும் பட்டுத்தானே ஆகணும்? முன்னெல்லாம் எவ்வளவு அன்பாயிருந்தார் என்று இப்பொழுது நினைக்கும்போது, 'பகீர்' என்கிறது.

வரும்போதே, என்னை இழுத்துத் தள்ளிக் காலால் உதைப்பவர் போலத்தான் பார்க்கிறார். அன்றைக்கொரு நாள், என் தலை மயிரைப் பிடித்து இழுத்துக் குலுக்க ஆரம்பித்து விட்டார். தலையை விடுவிக்கிறதே பெரும் பிரயத்தனமாகிவிட்டது. அந்தக் குட்டியிருக்கிறாளே, உடல் முழுதும் விஷம். பாம்பையாவது நம்பலாம், அவளை நம்பக்கூடாது.

மாவ்ரா: உன் பாடு ரொம்பக் கஷ்டந்தான். பாவம்! நீ இருக்க இடங்கொடுத்தாய். இன்று உன் இருப்பிடத்தை அவன் பற்றிக்கொண்டான். அவன் சொன்னபடி நீ இன்று ஆட வேண்டியிருக்கிறது. ஏதாவது சொல்லிக் கண்டிக்கக் கூடாதா?

அநிஸ்யா: இறந்துபோனவரை, நான் என்ன சொன்னாலும் கேட்கும்படி ஆட்டி வைத்தேன். இவரிடம் அந்த ஜாலமெல்லாம் சாயாது. இவரைக் கண்டவுடனேயே என் கோபமெல்லாம் பறந்தோடிப் போகிறது. இவர்முன்னால், என் தைரியமெல்லாம் போய் விடுகிறது. பழகின நாய் வாலையாட்டுகிற மாதிரி, சுற்றிச் சுற்றி வர ஆரம்பித்து விடுகிறேன்.

மாவ்ரா: இதில் ஏதோ சூது இருக்கிறது. மெலிந்து துரும்பாய்ப் போய் விட்டாயே!

அநிஸ்யா: ஆமாம். ஆனால், அவளைப் பார்! மேலெல்லாம் அழுக்காய், தலையைப் பரட்டையாய் விரித்துக் கொண்டு அங்கு மிங்கும் அலைந்தவள், இப்பொழுது எப்படியிருக்கிறாள்! இந்த மினுக்கெல்லாம் யார் கற்றுக் கொடுத்தது? சந்தேகமில்லாமல் அவர் தான். . அவளுக்கு இப்பொழுது எந்நேரமும் தன்

உடம்பைப்பற்றியே கவலே. அவள் உடம்பு இருக்கிற மினுமினுப்பையும் திமிரையும் பார்த்தாயா? அவளு குப் புத்தி மாத்திரம் குறைச்சலென்ருலும், எப்ப டியோ சில விஷயங்கள் பட்டு விடுகின்றன. ‘இந்த வீட்டுக்கு நான்தான் ராணி. இது என் வீடு. நிகிதா வுக்கு என்னைத்தான் விவாகம் செய்து கொடுப்பது என்று அப்பா நினைத்திருந்தார்’ என்று தனக்குத் தானே வாய்விட்டுச் சொல்லிக் கொள்ளுகிருள். அவளுக்குக் கோபம் வந்து பார்க்க வேணுமே! ஐயையோ, இந்த வீடு தாங்காது அதை!

மாவ்ரா: நீ நடத்துகிற குடித்தனத்தைப் போல, நரக வேதனை வேறு கிடையாது, பாவம்! அப்படி யிருந்தும் சிலர் உன்னைக் கண்டு பொருமைப் படுகிருர் கள். ‘பணமிருக்கிறது. அவளுக்கென்ன குறை?’ என் கிருர்கள். துன்பத்தைப் பணம் நிவர்த்திக்க முடியுமா? இதை அவர்களெங்கே அறியப் போகிருர்கள்?

அநிஸ்யா: என் மீதும் பொருமையா? இன் னும் கொஞ்ச காலத்தில் அதற்கும் காரணமிராது. பணத்தை யெல்லாம் சீக்கிரம் கரைத்து விடுவார்.

மாவ்ரா: ரொக்கத்தை யெல்லாம் ஏன் அவர் கையில் கொடுத்தாய்? இப்படி யெல்லாம் நடக்கும் என்று கொஞ்சங்கூட உனக்குத் தெரியாதா?

அநிஸ்யா: அந்தக் கதை முழுதும் உனக்குத் தெரியாதே!

மாவ்ரா: எனக்கு மட்டும் இது நேர்ந்திருந் தால், உடனே கோர்ட்டுக்குப் போயிருப்பேன். பணம் உன்னுடையது. கண்டபடி அதைச் செலவு பண்ண அவன் யார்?

அநிஸ்யா: அதைப்பற்றிக் கொஞ்சங்கூட அவருக்குக் கவலையில்லை.

மாவ்ரா: [வெளியே பார்த்துக்கொண்டு:] அதோ யாரோ வருகிறார்களே!

[கதவைத் திறந்து கொண்டு அகிம் வருகிறான். கிறிஸ்து சிலையின் முன்னால் பணிந்து வணங்குகிறான். பிறகு, தன் மேலங்கியைக் கழற்றி எறிந்து விட்டு, காலில் ஒட்டிக்கொண்டிருந்த பனிக்கட்டியைத் தட்டுகிறான்.]

அகிம்: சௌக்கியந்தானே, அம்மா?

அநிஸ்யா: வாருங்கள் மாமா. நேராகக் கிராமத்திலிருந்துதான் வருகிறீர்களோ?

அகிம்: ஆமாம்—நிகிதாவைப் பார்த்துப் போகலாம் என்று வந்தேன். உம்...அவனைக் காணோமே! எங்கே போயிருக்கிறான்?

அநிஸ்யா: பட்டணத்துக்குப் போயிருக்கிறார்.

அகிம்: [கட்டிலின் மீது உட்கார்ந்து கொள்ளுகிறான்.] ஒரு காரியமாகத்தான் வந்திருக்கிறேன். நம் வீட்டுக் குதிரை நோயால் செத்துப்போய் விட்டது. பண்ணை வேலைக்குக் குதிரையில்லாமல் முடியுமா? புதுக் குதிரை யொன்று வாங்கவேண்டும். இதை அவனிடம் முன்னமேயே சொல்லி யிருக்கிறேன்.

அநிஸ்யா: அவரும் என்னிடம் சொன்னார். நீங்கள் கொஞ்சம் சாப்பிடுங்கள். அதற்குள் அவர் வந்து விடுவார். [மிட்ரிக்கை அழைத்து:] மிட்ரிக், நீயும் சாப்பிட வா.

மிட்ரிக்: இதோ!

மாவ்ரா: நான்போய்வருகிறேன். [போகிருள்.]

மிட்ரிக்: [கணப்போரத்தை விட்டு வருகிருன்.] வாருங்கள் ஐயா!

அகிம்: நீ இங்கே எப்பொழுது வந்தாய்?

மிட்ரிக்: உங்களுடைய மகன் பண்ணையில் தான் இப்பொழுது வேலை செய்கிறேன்.

அகிம்: ஏன் இங்கு வந்தாய்? பட்டணத்தில் சௌகரியமாய்க் காலங் கழித்து வந்தாயே?

மிட்ரிக்: பட்டணத்தில் ஒரு பெரிய வியாபாரி யிடம் நான் வேலை செய்தேன். கிடைத்த பண மெல்லாம் குடியிலே தொலைந்தது. அதனல் தான் கிராமத்துக்குத் திரும்பி வரும்படி நேரிட்டது. இங்கே எனக்கு வீடு வாசல் கிடையாது. ஆகவே, வேலைக்காரனுகவே நிகிதாவின் பண்ணையில் உழைக் கிறேன்.

அகிம்: [அநிஸ்யாவைப் பார்த்து:] முன்னைக் காட்டிலும் அதிகப்படியான வேலை இப்பொழுது என்ன இருக்கிறது? எதற்காக ஒரு வேலையாளை அமர்த்திக்கொண்டு பணத்தை வீணுக்க வேண்டும்?

அநிஸ்யா: பண்ணை வேலையைவிட முக்கிய மான பல வேலைகள் அவருக்குப் புதிதாக உண்டாகி யிருக்கின்றன. அதனல்தான் பண்ணைவேலையைக் கவனித்துக்கொள்ள ஒரு வேலையாளை அமர்த்திக் கொண்டிருக்கிருர்.

மிட்ரிக் : ஆம்! பணமிருக்கும்போது ஒரு வேலையாள் வைத்துக்கொண்டால் என்ன கெட்டுப் போகும்?

அகிம் : அது சரியல்ல.......பணம் மனிதனைக் கெடுத்து விடுகிறது.

மிட்ரிக் : உடல் கொழுத்தால் நாய்க்குக் கூடப் பைத்தியம் பிடித்து விடுகிறது; மனிதனுக்குப் பணம் கொழுத்தால் கேட்கவும் வேண்டுமா? பணம் செழிப்பாயிருந்தபோது, நான் அளவுக்கு மிஞ்சிக் குடித்துவிட்டு சுய நினைவே இல்லாமலிருந்ததுண்டு, பணம் கரைந்த பிறகு, அந்தப் பழக்கத்தை அடியோடு விட்டுவிட்டேன். [மௌனம்.]

அகிம் : [அநிஸ்யாவைப் பார்த்து :] ஏதாவது சரக்குக் கொண்டுபோயிருக்கிறானா, பட்டணத்தில் விற்க?

அநிஸ்யா : [பீங்கான் தட்டுக்களை மேஜைமீது பரப்பி அவைகளில் ஆகாரத்தை எடுத்துவைக்கிறாள்.] விற்கவா? ஊஹூம், ஒன்றுமே கொண்டுபோகவில்லை. பாங்கியிலிருந்து பணம் வாங்கிவரப் போயிருக்கிறார்.

அகிம் : [மேஜையின் முன் வந்து சாப்பிட உட்காருகிறான்.] எந்தக் காரியத்துக்காகவாவது அவசியமாகப் பணம் வேண்டியிருந்ததா?

அநிஸ்யா : அப்படி ஒன்றுமில்லை. மாதம் இருபது அல்லது முப்பது ரூபிள் வட்டி கிடைக்கும். அதை அந்தந்த மாதத்தில் வாங்கிக் கொள்வோம்.

அகிம் : இன்று கொஞ்சம், நாளைக்குக் கொஞ்சம், இப்படியாகத் தினம் எடுத்தால், பணம் பூராவும் கரைந்து போகாதா?

அநிஸ்யா : முதல் குறையாது. இது அதிகப் படியாக எங்களுக்குக் கிடைக்கிற பணம்.

அகிம் : முதல் குறையாதா? அது எப்படி? ஒரு பானை நிறையத் தானியம் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். தினம் ஒரு பிடி வீதம் ஒவ்வொரு நாளும் அதிலிருந்து எடுத்தால், என்றைக் காவது ஒரு நாள் பானை காலியாகிவிடும், இல்லையா! எப்படிக் குறையாமல் இருக்க முடியும்? இதில் ஏதோ சூது இருக்கிறது. என்ன? நீங்கள் எடுத்துக் கொண்டே யிருந்தால் பணம் எப்படிக் குறையாமல் இருக்கும்?

அநிஸ்யா : அதைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. பாங்கியில் பணத்தைப் போட்டால், மாதந்தோறும் வட்டி கிடைக்கும், பணமும் பத்திர மாய் இருக்கும் என்று வக்கீல் இவான் மோஸீச் சொன்னார்.

மிட்ரிக் : [சாப்பாட்டை முடித்துவிட்டு எழுந் திருக்கிறான்.] எனக்குத் தெரியும். பட்டணத்து வியாபாரிகள் எல்லோரும் அப்படித்தான் செய்கிறார் கள். பணத்தைப் பாங்கியில் போட்டுவிட்டு, வீட் டில் சோம்பிக் கிடக்கிறார்கள். மாதந்தோறும் வட்டி வந்துகொண்டே யிருக்கிறது.

அகிம் : இதென்ன வேடிக்கையாயிருக்கிறது? நான் சொல்வதென்ன?...அதெப்படிக் கிடைக்கும்?

அநிஸ்யா : பாங்கியிலிருந்து கொடுப்பார்கள்.

மிட்ரிக் : பெண்களுக்கு எப்படி இந்த விஷயங்களெல்லாம் விளங்கும்? நீ பேசாமலிரு. நான் உங்களுக்கு விளங்கும்படி சொல்லுகிறேன், அகிம்! மழை பெய்து ஆற்றில் ஜலம் போகிறது. என் கையில் பணமில்லை. நிலம் தரிசாய்க் கிடக்கிறது. விதை வாங்கவேண்டும், வரிப்பணம் கட்டவேண்டும். உங்களிடம் பணமிருக்கிறது. நான் உங்களிடம் வந்து, 'அகிம், எனக்குப் பத்து ரூபாய் கடனாகக் கொடுங்கள். அறுவடையானவுடன், உங்கள் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். தவிர நீங்கள் செய்கிற உதவிக்காக, உழவு காலத்தில் உங்கள் நிலத்தில் இரண்டு ஏகரா நிலத்தை உழுது தருகிறேன்' என்று சொல்லுகிறேன். நீங்கள் என் அவசரத்தைப் பார்த்துக்கொண்டு, 'காலத்தில் நான் செய்யும் உதவிக்குப் பதில் இரண்டு ரூபிள் அதிகம் சேர்த்துத் தரவேண்டும்' என்று கேட்கிறீர்கள். எனக்கு வேறு வழியில்லாவிட்டால், நீங்கள் கேட்டதற்குச் சம்மதித்துத்தானே ஆகவேண்டும்? அறுவடையானவுடன், தானியத்தை விற்று, பன்னிரண்டு ரூபிள் கொண்டுவந்து உங்களிடம் கொடுத்து விடுவேன்.

அகிம் : குடியானவர்கள் கடவுள் ஒருவர் இருக்கிறு ரென்பதை மறந்து விட்டுச் செய்யும் காரியமல்லவா இது? இது யோக்கியமானதா ?

மிட்ரிக் : சரி; இன்னும் கேளுங்கள். என்னிடம் இரண்டு ரூபிள் அதிகப்படியாக வாங்கி விட்டீர்கள். இல்லையா? இப்பொழுது அநிஸ்யாவிடம்

கொஞ்சம் பணமிருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். அவளுக்கு அதை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று தெரியவில்லை. உங்களிடம் வந்து, தன் பணத்தைக் கொடுத்து, 'இதை வைத்துக் கொண்டு ஏதாவது லாபம் சம்பாதிக்க முடியுமா? என்று கேட்கிருள். நீங்கள் வாங்கி வைத்துக் கொள்ளுகிறீர்கள். என்னைப் போல யாராவது கடன் கேட்க வருவார்களல்லவா? அவர்களிடம் கொடுத்து, கொடுத்ததற்குமேல் வசூலிக்கிறீர்கள். அதிகப்படி வசூலித்ததில் ஒரு பகுதியை அநிஸ்யா வுக்குக் கொடுக்கிறீர்கள். இதுதான் ஒரு பாங்கி செய்யும் வேலை.

*அகிம்:* இது முற்றிலும் அயோக்கியத்தனம், பாவம்.

*மிட்ரிக்:* பாவத்தையும் புண்ணியத்தையும் இந்தக் காலத்தில் யார் யோசிக்கிருர்கள்?

*அகிம்:* [பெருமூச்சு விடுகிருன்.] இதுதான் நாகரிகம் போலிருக்கிறது! பூராவும் வேஷம். நான் சொல்வது சரிதானே! இந்த நாகரிக காலத்தில், உலகம் கடவுளை மறந்து விட்டது. நீ சொன்னது இப்போது எனக்கு நன்ருக விளங்குகிறது. [எழுந்திருக்கிருன். மிட்ரிக் கணப்போரம் போகிருன்.]

*அநிஸ்யா:* [சாப்பிட்டுக்கொண்டே தனக்குள்:] நிகிதாவின் போக்கை இவரால் மாற்ற முடியுமா? ஆனல், அதையெல்லாம் இவரிடம் எப்படிச் சொல்லுவது?

*அகிம்:* ஏதோ முணுமுணுத்தாயே, என்ன?

அநிஸ்யா : ஒன்றுமில்லை.

[அன்னு உள்ளே வருகிறுள்.]

அகிம் : நல்ல பெண். எப்பொழுதும் சுறு சுறுப்பா யிருக்கிறுள். ஐயையோ, உடம் பெல்லாம் குளிர்ந்து போயிருக்குமே! இங்கே வா.

அன்னு : ஆமாம். பொறுக்க முடியவில்லை குளிர்.

அநிஸ்யா : உம். அங்கே இருந்தாரா அவர்?

அன்னு : இல்லை. ஆண்டிரியன் இருந்தான். அவன், அப்பாவைப் பட்டணத்தில் கண்டானும். தலை கால் தெரியாதபடி குடித்திருந்தாராம்.

அநிஸ்யா : சரி சரி. சாப்பிட வேண்டாமா நீ! இப்படி வா.

அன்னு : [கணப்புப் பக்கம் போகிறுள்.] கால் கை யெல்லாம் விறைத்துப் போய்விட்டது. அப்பா, எவ்வளவு பனி!

[அகிம், சணலினுல் செய்த தன் காலுறைகளைக் கழற்றுகிறுன். அநிஸ்யா பாத்திரங்களைக் கழுவுகிறுள்.]

அநிஸ்யா : மாமா!

அகிம் : என்ன?

அநிஸ்யா : மரீனு எப்படி யிருக்கிறுள்?

அகிம் : சுகமா யிருக்கிறுள். நல்ல புத்திசாலி. விடா முயற்சியுள்ளவள். கவலையோடு நில புலங் களைப் பார்த்துக் கொள்ளுகிறுள். வீட்டுப் பேச்சு வெளியிலே போகாதபடி, அடக்க ஒடுக்கமாய்க் குடித்தனம் பண்ணுகிறுள்.

அநிஸ்யா : மரீனாவின் கணவருக்கு யாரோ தூரபந்து ஒருத்தர் நம் அகுலினாவைக் கலியாணம் பண்ணிக்கொள்ள விரும்புகிறாராமே? அதைப்பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா ?

அகிம் : ஆமாம். அவன் பெயர் மிரானவ். மிரானவ் குடும்பத்தார் நல்ல செல்வாக்கும், செல்வமும் உடையவர்கள்.

அநிஸ்யா : அகுலினாவுக்குச் சீக்கிரமாய்க் கலியாணம் செய்துவிட வேண்டும்.

அகிம் : ஏன் ?

அன்னு : [வெளியே கவனித்துவிட்டு :] உஸ்! அதோ வந்துவிட்டார்கள்.

அநிஸ்யா : நீ பேசாமலிரு. [பேசாமல் பாத்திரங்களைக் கழுவுகிறாள்.]

[நிகிதா வாசற்படிக்கு அப்புறம் நின்று கொண்டு பேசுகிறான்.]

நிகிதா : அநிஸ்யா, அடியே ! யார் உள்ளே வருகிறது ? [அநிஸ்யா திரும்பிப் பார்க்கிறாள். பிறகு வெறுப்புக் கறிகுறியாக முகத்தைச் சட்டென்று வேறு பக்கம் திருப்பிக் கொள்கிறாள்.]

நிகிதா : [கோபமாக :] யார் வருகிறது என்று கேட்கிறேன் !

அநிஸ்யா : போதும் இந்தக் கூத்து. உள்ளே வாருங்கள்.

நிகிதா : [இன்னும் அதிகக் கோபத்தோடு :] இப்பொழுது உள்ளே வருகிறது யார் ?

அநிஸ்யா : [கதவண்டை போய், அவன் கையைப் பற்றிக்கொண்டு :] உம் ! என் கணவர் வந்திருக்கிறார். சரி. இப்பொழுது உள்ளே வாருங்கள்.

நிகிதா : [இன்னும் வெளியே நின்றுகொண்டே :] கணவன் ! அது யார் ? அவன் பெயர் என்ன ?

அநிஸ்யா : அட சனியனே ! உம்...நிகிதா.

நிகிதா : உனக்கு மரியாதை இல்லே ? முழுப் பெயர் என்ன ?

அநிஸ்யா : நிகிதா அகிமிச். சரி, இப்பொழுதாவது உள்ளே வாருங்கள்.

நிகிதா : [இன்னும் இருந்த இடம்விட்டு நகராமல் :] குடும்பப் பெயர் ?

அநிஸ்யா : சிலிகின். இப்பொழுது என்ன வந்துவிட்டது ? [சிரித்துக்கொண்டு, அவன் இரு கைகளையும் பற்றி இழுக்கிறாள்.]

நிகிதா : ரொம்ப சரி. [வாசற்படியின் மேல் பாகத்தைப் பற்றிக்கொள்ளுகிறான்.] எந்தக் காலைச் சிலிகின் முதலில் எடுத்து வைப்பது என்று சொல்.

அநிஸ்யா : போதும் உங்கள் விளையாட்டெல்லாம் ! குளிர்ந்து விறைக்கிறது ! கதவைத் திறந்து கொண்டு நிற்கிறீர்களே !

நிகிதா : இப்பொழுது சொல்லியாக வேண்டும் ! இல்லாவிட்டால் உள்ளே வரமாட்டேன் !

அநிஸ்யா : இவர் தொந்தரவுக்கு முடிவே கிடையாது. [நிகிதாவைப் பார்த்து :] சரி சரி, இடது கால். வாருங்கள் உள்ளே.

நிகிதா : உம்! சரி.

அநிஸ்யா : உள்ளே இருக்கிறவர் யார் என்று பாருங்கள்.

நிகிதா : ஓ! எங்கப்பா! வாருங்கள். சௌக்கியந்தானே அப்பா! [பணிந்து ருஷிய முறையில் வணங்குகிருன்.]

அகிம் : [அவனைப் பாராமலேயே :] குடி! குடி தான் அவனை இந்தப் பாடு படுத்துகிறது.

நிகிதா : குடியா? நான் குடித்திருக்கிறேன் என்று சொல்லுகிறீர்கள்? என் மேல் குற்றந்தான், அது சரி. ஒரு நண்பனோடு உல்லாசமாய் ஒரே ஒரு புட்டி தான்......

அநிஸ்யா : சரி. போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்.

நிகிதா : அநிஸ்யா, நான் எதன் மேல் நிற்கிறேன் என்று சொல்.

அநிஸ்யா : போதும், போதும். போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்.

நிகிதா : உம்! எங்கப்பா வந்திருக்கிருர். அவருடன் ஒரு கோப்பைக் காபி குடிக்கப் போகிறேன். போ. காபி கொண்டுவா. அகுலினு! [அழைக்கிருன்.]

[அழகாக உடுத்துக் கொண்டு அகுலினு வருகிருள். அவள் கையில் புதிதாகப் பட்டணத்தில் வாங்கிய சாமான்களிருக்கின்றன.]

அகுலினு : நெய்வதற்கு நூல் கட்டுகள் வாங்கி வந்தாயே? அவை யெங்கே?

*நிகிதா :* நூல் கட்டுகளா! அங்கேதா னிருந்தன. மிட்ரிக்! [அழைக்கிறுன்.] தூங்குகிறுயா ? வண்டியில் பூட்டியிருக்கும் குதிரையை அவிழ்த்துக் கட்டு.

*அகிம் :* [அகுலினு நிற்கும் பக்கமே பாராமல் தன் மகனையே கூர்ந்து நோக்குகிறுன்.] இதென்ன ? இவனுக்கு என்ன இத்தனை ஆடம்பரம் ?

*மிட்ரிக் :* [கணப்போரத்தை விட்டு வந்து, ரப்பர் செருப்பை மாட்டிக் கொள்ளுகிறுன்.] குதிரை முற்றத்தில் நிற்கிறதா ? இந்தப் பனியை எப்படித் தாங்கும் ?...மூக்கு முட்டக் குடித்திருக்கிறுன் இவன். [ஆட்டுத் தோல் மேலங்கி ஒன்றைப் போட்டுக் கொண்டு, வெளியே போகிறுன்.]

*நிகிதா :* [உட்காருகிறுன்.] மன்னிக்கணும் அப்பா ! இரண்டொரு சொட்டு நாக்கில் பட்டது உண்மை தான். அதனுல் என்ன ? இந்தக் காலத்தில் குடிக்காதவர்கள் யார் ? மன்னிக்கணும் அப்பா !

*அநிஸ்யா :* அடுப்பைப் பற்றவைக்கவா ?

*நிகிதா :* உம் ! எங்கள் அப்பா வருகிறது அபூர்வம். அவர் இப்போது வந்திருக்கிறுர். காபிவேண்டாம். தேநீர் போடு. [அகுலினுவைப் பார்த்து:] எல்லாச் சாமானையும் உள்ளே கொண்டு வந்து விட்டாயா ?

*அகுலினு :* நான் ஏன் எல்லாவற்றையும் கொண்டு வருகிறேன் ? என்னுடையதை மட்டும் கொண்டு வந்திருக்கிறேன். மற்றவை யெல்லாம் வண்டியிலிருக்கின்றன. உம்...இது என்னுடையதல்ல.

[ஒரு பெரிய மூட்டையை மேஜை மீது எறிகிருள். மற்றச் சாமான்களை எடுத்துப் பத்திரப்படுத்துகிருள். அவள், பெட்டிக்குள் வைக்கும் போது அன்ரு அவளையே பார்த்துக் கொண்டிருக்கிருள். அகிம், கீழே குனிந்து கொண்டே தனது காலுறைகளைக் கணப்பின் மேல் உலர்த்துகிருன்.]

அநிஸ்யா : [அறையை விட்டு வெளியேறிக் கொண்டே :] அவள் பெட்டி நிறையத்தான் வேண்டிய சாமான் இருக்கிறதே, இன்னும் பணத்தைக் கொட்டி எதற்காக வெகுமதி வாங்கி வருகிருள்?

நிகிதா : [சுயநினைவோடு பேசுபவன் போலப் பாவனை செய்து கொண்டு :] என் மீது கோபங் கொள்ளக் கூடாது, அப்பா! குடிவெறியோ டிருப்பதாகத் தானே நினைக்கிறீர்கள்? அப்படி யொன்றுமில்லை. எந்த வேலையை வேண்டுமானுலும் நான் கவனிக்க முடியும். உங்களுக்குப் பணம் வேண்டும், இல்லையா? பழைய குதிரை இறந்து போய் விட்டது. புதிதாக ஒன்று வாங்க வேண்டும். உடனே வாங்கி விடலாம். ரொம்பப் பணம் வேண்டுமென்ருல் கொஞ்ச காலம் போக வேண்டும்.

அகிம் : பனி உருகும்போது வெளியே நடப்பது அபாயம் என்று சொல்வார்கள். அது போல...

நிகிதா : குடித்தவனிடம் பேசுவது அபாயம், என்கிறீர்கள். உம்! கொஞ்சம் தேநீர் குடிக்கலாம். எனக்குக் குடிவெறி யில்லை. எந்தக் காரியத்தையும் நான் இப்போது கவனிக்க முடியும்.

[அகிம் தலையை ஆட்டி விட்டுப் பேசாமலிருக்கிறுன்.]

நிகிதா : இதோ பணம். [ஜேபியிலிருந்து தனது குறிப்புப் புஸ்தகத்தை எடுத்து, அதிலிருந்து ஒரு பத்து ரூபிள் நோட்டை எடுக்கிறுன்.] இதைக் கொண்டு போய் ஒரு குதிரை வாங்கிக் கொள்ளுங்கள். என் தகப்பனுர் கஷ்டப்பட நான் பார்த்துக் கொண்டிருப்பேனு? இதோ. எடுத்துக் கொள்ளுங்கள். [எழுந்து வந்து, நோட்டை அகிமிடம் நீட்டுகிறுன். அவன் அதை வாங்கிக் கொள்ளாமல் மௌனமா யிருக்கிறுன். அவன் கையைப்பற்றி அதில் வைக்கிறுன்.] உம்! இதோ.

அகிம் : எனக்கு வேண்டாம். உம்...உனக்குச் சுய புத்தியில்லே. என்ன நான் சொல்வது! நான் உன்னேடு பேசத் தயாராயில்லே.

நிகிதா : இதை வாங்கிக் கொள்ளா விட்டால் உங்களேப் போகவிட மாட்டேன்.

[அகிம் கையில் பணத்தைத் திணிக்கிறுன்.]

அநிஸ்யா : [அறையினுள் நுழைந்து :] பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் தொந்தரவு பண்ணப் போகிறுர்.

அகிம் : [பணத்தை வாங்கிக் கொள்ளுகிறுன்.] ஐயையோ! குடி!

நிகிதா : திரும்பத் தர முடியுமானுல் திரும்பத் தாருங்கள். இல்லாவிட்டால் வேண்டாம். [அகு

லினுவைப் பார்க்கிறுன்.] அகுலினு! உன் வெகுமதிகளை எல்லாருக்கும் காட்டு.

அகுலினு: என்ன?

நிகிதா: எல்லாவற்றையும் காட்டு.

அகுலினு: ஏன் காட்ட வேண்டும்? எல்லாவற்றையும் உள்ளே வைத்து விட்டேனே!

நிகிதா: கொண்டுவா, இங்கே. அன்னு பார்க்கட்டும். அந்தச் சால்வையை இங்கே கொடு.

அகிம்: உம்......இது ஒன்றுமே எனக்குப் பிடிக்கவில்லை. [கணப்போரம் போய்விடுகிறுன்.]

அகுலினு: [எல்லாச் சாமான்களையும் மேஜை மீது பரப்புகிறுள்.] யார் இவைகளைப் பார்க்க வேண்டும்?

அன்னு: [சால்வையைப் பார்த்துவிட்டு] ஓ! அடுத்த தெருவிலிருக்கும் ஸ்டெபானிடா விடத்திலே இதே போல ஒரு சால்வை யிருக்கிறது.

அகுலினு: இது பிரஞ்சுச் சால்வையாக்கும்! அவள் சால்வை இதைவிட எவ்வளவோ மட்டம். [சந்தோஷத்தோடு மூட்டைகளை அவிழ்க்க ஆரம்பிக்கிறுள்.]

அன்னு: ஆமாம்! அச்சு ரொம்ப நேர்த்தியாயிருக்கிறது.

நிகிதா: ஆமாம்.

[அநிஸ்யா, கோபத்தோடு பக்கத்து அறையில் நுழைந்து, கையில் தேநீர் கெட்டிலையும் மேஜைமேல் விரிக்கிற

துணியையும் எடுத்துக்கொண்டு வருகிருள்.]

அநிஸ்யா: குப்பை கூளத்தை யெல்லாம் கொண்டு வந்து மேஜைமேல் எதற்காகக் குவிக்கிருய்?

நிகிதா: [கோபமாய்:] இதோ பார்!

அநிஸ்யா: எதைப் பார்க்கணும்? இதற்கு முன் நான் ஒன்றையும் பார்த்ததில்லையா? போதும், போதும். எல்லாவற்றையும் பெட்டிக்குள் எடுத்து வை. [அகுலினு விரித்துக் கையில் பிடித்துக் கொண்டிருந்த சால்வையை கையினுல் தட்டிக் கீழே விழச் செய்கிருள்.]

அகுலினு: ஏன் இப்படிப் பிடுங்கிக் கீழே எறிகிருய்? உன் சாமானைக் கீழே போட்டுப் புரட்டு. [கீழே கிடக்கும் சால்வையை எடுத்துக் கொள்ளுகிருள்.]

நிகிதா: அநிஸ்யா, இதோ பார்.

அநிஸ்யா: எதைப் பார்க்கணும்?

நிகிதா: உன்னை மறந்துவிட்டேன் என்று நினைக்கிருய்? இதோ பார். [ஒரு பெரிய காகித மூட்டையைக் காட்டி அதைக் கீழே போட்டு, அதன் மேல் உட்கார்ந்து கொள்ளுகிருன்.] உனக்கு வெகுமதியாகக் கொண்டு வந்திருக்கிறேன். நான் எதன் மேல் உட்கார்ந்திருக்கிறேன் என்று சொல் பார்க்கலாம்.

அநிஸ்யா: போதும் உங்கள் வேடிக்கைக ளெல்லாம்! ஓட்டாஞ்சல்லி போல வாரி இறைக்கிறீர்

களே, யாருடைய பணம்? என்னுடையதுதான் என்பது மறந்துபோய் விட்டதா?

அகுலினு: உன்னுடைய பணமா? ரொம்ப உண்மைதான்! நீ இந்தப் பணத்தைத் திருட எண்ணியிருந்தாய். உன் எண்ணம் பலிக்கவில்லை. தூரப்போ! [அநிஸ்யா மீது சாய்ந்து அவளைத் தள்ளுகிருன்.]

அநிஸ்யா: எதற்காக என்மீது விழுகிருய்? உன்னைப் பிடித்து நான் தள்ளினல் உன் உயிரே போய்விடும்!

அகுலினு: என்னையா? எங்கே பார்ப்போம். [மறுபடியும் அநிஸ்யா மீது சாய்ந்து அவளைத் தள்ளுகிருன்.]

நிகிதா: உம்! இது என்ன இது? [அவர்களை விலக்கி இடையில் வந்து நிற்கிருன்.]

அகுலினு: [அநிஸ்யாவை நோக்கி:] உன் விஷயமெல்லாம் ஒருவருக்கும் தெரியாது என்று நினைத்துக் கொண்டிராதே. எனக்குத் தெரியும் எல்லாம்.

அநிஸ்யா: உனக்கென்ன தெரியும்? சொல்லு இப்பொழுதே! இந்த மிரட்டலெல்லாம் யாரிடம்?

அகுலினு: எனக்கு உன்னைப்பற்றிக் கொஞ்சம் தெரியும்.

அநிஸ்யா: நீ மானங்கெட்டவள். மற்ரெருத்தியின் கணவனேடு பகிரங்கமாய் வாழ்கிருய்.

அகுலினு: நீ உன் கணவனுக்கு விஷங் கொடுத்துக் கொன்ருய்!

அநிஸ்யா: [அகுலினு மீது வேகமாய்ப் பாய்கிருள்:] உளருதே!

நிகிதா: [அவளைத் தடுத்து:] என்ன, அதற்குள் மறந்து விட்டாயா?

அநிஸ்யா: பயமுறுத்தப் பார்க்கிறாயோ? அதெல்லாம் இங்கே செல்லாது.

நிகிதா: [அநிஸ்யாவைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி:] போ, வெளியே!

அநிஸ்யா: நான் எங்கே போவது? என் சொந்த வீட்டைவிட்டு நான் எங்கும் போகமாட்டேன்.

நிகிதா: போ, வெளியே. உள்ளே வந்தால் தொலைத்து விடுவேன்.

அநிஸ்யா: நான் போகமாட்டேன். [நிகிதா அவளை வெளியே தள்ள முயல்கிறான். அவள் கதவைப் பிடித்துத் தொங்கிக் கொண்டே நகர மறுக்கிறாள்.] என் வீட்டை விட்டு என்னைத் துரத்த யாருக்கு அதிகாரமுண்டு? உன்னைக் கேட்பதற்குச் சட்டமில்லை என்று நினைத்தாயா? முரடா!

நிகிதா: உம்! போ வெளியே.

அநிஸ்யா: நேரே நாட்டாண்மைக்காரரிடமாவது போலீஸ் அதிகாரியிடமாவது போய்ச் சொல்லுகிறேன்.

நிகிதா: சரி. சரி. எங்கேயாவது போ.

அநிஸ்யா: [கதவின் வெளிப்புறமிருந்து:] தற்கொலைதான் எனக்குக் கதி.

நிகிதா: ஓ! பயமில்லை.

[அன்னா, 'அம்மா, அம்மா' என்று கதறி அழுகிறாள்.]

நிகிதா : அவளுக்கு நான் பயப்படுவதாவது! [அன்னுவைப் பார்த்து :] நீ ஏன் அழுகிருய்? அவள் கொஞ்ச நேரங்கழித்துத் திரும்பி வந்து விடுவாள். போய் அடுப்பைப் பார்த்துக்கொள். [அன்னு வெளியே போகிருள்.]

அகுலினு : [மேஜை மீது கிடந்த தன் சாமான் களைச் சேகரித்துக்கொண்டே :] எல்லாவற்றையும் குழப்பிப் போட்டு விட்டாள்!

நிகிதா : போதும், போதும்! அவளைத்தான் வெளியே துரத்தியாகி விட்டதே! இன்னும் என்ன வேண்டும்?

அகுலினு : என் புதுச் சால்வையை கீழே எறிந்து அழுக்காக்கி விட்டாள். அவள் இங்கேயே இருந்திருப்பாளானல், கண்ணைத் தோண்டி எறிந் திருப்பேன்!

நிகிதா : நீ ஏன் இன்னும் கோபப்படுகிருய்? ...அவளை நான் காதலித்தால்....

அகுலினு : காதலுக்குப் பாத்திரமானவளா அவள்? வீடும், பணமும் என்னுடையதுதானே? அவள்தான் எல்லாவற்றிற்கும் சொந்தக்காரியாம்! எப்படி என்று கேட்கிறேன். தன் புருஷனை அவள் காப்பாற்றியது உலகத்துக்குத் தெரியாதா? கொலை காரி! அவரை அனுப்பிய இடத்துக்கே உன்னையும் அனுப்பிவிடப் போகிருள். ஜாக்கிரதை.

நிகிதா : ஒரு பெண்பிள்ளை வாயை எப்படித் தான் அடக்க முடியுமோ தெரியவில்லை! அர்த்தந் தெரியாமல் ஏதாவது உளறிக் கொட்டாதே!

அகுலினு : அர்த்தம் புரிந்துதான் பேசுகிறேன். அவளுடன் என்னுல் இருக்க முடியாது. அவளே அடித்துத் துரத்தவேண்டும். எஜமானியாம் அவள்!

நிகிதா : அவளேப் பற்றிக் கவலேயில்லே. நான் தான் இந்த வீட்டு எஜமானன். என் இஷ்டப்படித் தான் இங்கே எல்லாம் நடக்கும். அவள் மேலே இப்போது எனக்கு ஆசை யில்லே. உன்மேல் தான் ஆசை, அவள் எனக்குட் பட்டவள். உம்...இங் கிருந்த வாத்தியத்தை எங்கே காணும்? [ஏதோ பாட ஆரம்பிக்கிருன்.]

[மிட்ரிக் உள்ளே வருகிருன். தன் வெளி உடைகளேக் களேந்து விட்டு, கணப்போரம் போகிருன்.]

மிட்ரிக் : [தனக்குள் :] ஓகோ, மறுபடியும் பெண்களுக்குள் சண்டை வந்துவிட்டது போலிருக் கிறது.

அகிம் : [கணப்போரத்தில் எழுந்து உட் கார்ந்து கொண்டு, தன் காலுறைகளேப் போட்டுக் கொள்ளுகிருன்.] இப்படி வா மிட்ரிக்!

மிட்ரிக் : சண்டை யெல்லாம் சமாதானமாகத் தீர்த்துக் கொள்ளக் கூடாதா?

நிகிதா : கொஞ்சம் 'வாட்கா' கொண்டுவா. தேநீரோடு கொஞ்சம் குடிக்கலாம்.

அன்னு : [அகுலினுவிடம் :] அக்கா, ஜலம் கொதித்து வழிகிறது.

நிகிதா : உங்கம்மாவைக் காணேமே! எங்கே அவள்?

அன்ன : வெளியே நின்று அழுதுகொண்டிருக்கிருள்.

நிகிதா : அவளைக் கூப்பிட்டுத் தேநீர் தயார் செய்யச் சொல். அகுலின! நீ கோப்பையைக் கொண்டுவா.

[அகுலின கோப்பைகளைக் கொண்டு வருகிருள்.]

நிகிதா : [சாராயப் புட்டிகள், மீன் வற்றல், பருப்புக்கள் முதலியவற்றை ஒரு மூட்டையிலிருந்து எடுக்கிருன்.] இதெல்லாம் எனக்கு. நூல் சிப்பம் என் மனைவிக்கு. மீதி எவ்வளவு? [ஒரு சிறிய காகிதத்தில் எழுதிக் கூட்டுகிருன்.] கோதுமை மா, 80 கோபெக், எண்ணெய், ஒரு ரூபிள். அப்பாவுக்கு, 10 ரூபிள்......உம்...அப்பா! இங்கே வாருங்கள். தேநீர் அருந்தலாம்.

[மௌனம். அகிம், காலுறைகளின் மேல் செருப்பை மாட்டிக்கொள்ளுகிருன். அநிஸ்யா தேநீர்க் கெட்டிலை எடுத்துக் கொண்டு வருகிருள்.]

அநிஸ்யா : இதை எங்கே வைக்கவேண்டும்?

நிகிதா : மேஜை மீது வை. உம்......போலீஸாரிடம் போய் பிராது கொடுத்தாய் விட்டதா? அதற்குள் மறந்து போய்விட்டதா? உம், சரி சரி. கோபப்படாதே. இந்தா, இதைக் குடி. [ஒரு கோப்பைச் சாராயத்தை அவளிடம் நீட்டுகிருன்.] இதோ உனக்கு வெகுமதி. [தான் உட்கார்ந்திருந்த மூட்டையை எடுத்துக் கொடுக்கிருன். அநிஸ்யா அதை

வாங்கிக் கொண்டு முகத்தைத் திருப்பிக்கொள்ளு கிருள்.]

அகிம்: [தோல் சட்டையை அணிந்துகொண்டு, கணப்போரத்திலிருந்து வருகிருன். பிறகு, நிகிதா கொடுத்த நோட்டை மேஜை மீது வைக்கிருன்.] இதோ உன் பணம். எனக்கு வேண்டாம்!

நிகிதா: [நோட்டைப் பார்க்காமலேயே:] ஓகோ, எங்கே புறப்பட்டு வீட்டீர்கள்?

அகிம்: நான் போகிறேன். மன்னித்து விடு.

[தனது பெல்டையும், தொப்பியையும் எடுத்துக் கொள்ளுகிருன்.]

நிகிதா: நடு ராத்திரியாகி விட்டதே, இந்நேரத்தில் இங்கேயிருந்து எங்கே போகப் போகிறீர்கள்?

அகிம்: நான் இங்கேயிருக்க முடியாது. ஆமாம். உன் வீட்டில் எனக்கு வேலை யில்லை. நீ பாவி.

நிகிதா: பேச்செல்லாம் அப்புறம் வைத்துக் கொள்ளலாம். இங்கே வாருங்கள். கொஞ்சம் தேநீர் குடித்துவிட்டுப் போகலாம்.

அநிஸ்யா: என் இப்படித் திடீரென்று புறப்பட்டுவிட்டீர்கள்? அயலார் முன்னிலையில் எங்களைக் கேவலப்படுத்திவிடாதீர்கள்! எதனுல் உங்களுக்குக் கோபம்?

அகிம்: ஒன்றுமில்லை. என் மகன்......உம்...... பாழாக்கிவிட்டான்.......உம்......ஆமாம்........தன் வாழ்க்கையை......

நிகிதா : உம்! பாழாக்கியது யார்? எங்கே, காரணம் சொல்லுங்கள், பார்க்கலாம்!

அகிம் : பாழ்தான். முன்பு ஒரு சமயம் வந்திருந்தபோது உன்னிடம் என்ன சொன்னேன்?

நிகிதா : என்ன வெல்லாமோ சொன்னீர்கள். அதையெல்லாம் எப்படி ஞாபகம் வைத்திருப்பது?

அகிம் : அந்த அனுதைப் பெண்ணைப்பற்றி முன்னே சொல்லவில்லையா? ஆம்! மரீனுவுக்கு நீ தீங்கிழைத்ததாகக் குற்றம் சாட்டினேன் அல்லவா?

நிகிதா : போனது போகட்டும். பழைய குப்பைகளையெல்லாம் எதற்காகக் கிளறுகிறீர்கள்?

அகிம் : [வெறுப்போடு :] போனதாவது! அதைப் போனதாக நினைக்காதே. பாவத்திலிருந்து பாவமேதான் பிறக்கும். பாவம், பாவத்துக்கேதான் வழிகாட்டும். பாவத்தில் நன்ருகச் சிக்கிக்கொண்டாய் நீ, ஆம்! மீள வகையில்லாதபடி பாவப் படுகுழியில் அகப்பட்டுக்கொண்டாய்.

நிகிதா : அப்பா, உட்காருங்கள். தேநீர் அருந்துங்கள். அப்புறம் பேசிக்கொள்ளலாம்.

அகிம் : உன் தேநீர் யாருக்கு வேண்டும்? உன் உடல் முழுதும் பாவத்திலே தோய்ந்து அசுத்தப்பட்டிருக்கிறது. இங்கு நிற்பதற்கே எனக்கு அருவருப்பாயிருக்கிறது. உன் தேநீர் எனக்கு வேண்டாம்.

நிகிதா : உஸ், பேசாதேயுங்கள். இப்படி வாருங்கள்.

அகிம் : நீ பாவ வலைக்குள் சிக்கிக்கொண்டுவிட்டாய். நிகிதா! கடவுள், பணத்தைப்பற்றிக் கவலைப்

படமாட்டார். ஆன்ம சுத்தியையே அவர் விரும்பு கிருர்.

நிகிதா: எவ்வளவு நேரந்தான் இந்த வசவுகளை யெல்லாம் பொறுத்துக்கொண்டிருப்பது? என் வீட்டில்வைத்தே என்னைத் திட்ட உங்களுக்கு உரிமை கிடையாது. பேசாமலிருங்கள்.

அகிம்: ஆம்! நீ பாழாகிவிட்டாய்! அதுதான் எனக்குத் தெரியும்.

நிகிதா: [கோபத்தோடு:] உன் சோற்றைத் தின்று நாங்கள் வாழவில்லை. நீதான் என் உதவியை நாடி வந்திருக்கிருய்.

அகிம்: உன் பணம் கொடுத்தாயே, அதை அப்பொழுதே மேஜைமீது வைத்துவிட்டேன். அதோ... எடுத்துக்கொள். உன்னிடம் பணம் பெறுவதை விடப் பிச்சை எடுத்துப் பிழைக்கலாமே!

நிகிதா: கோபப்படாதேயுங்கள். [கையைப் பிடித்து நிறுத்துகிருன்.]

அகிம்: ஊஹூம். நான் இங்கு தங்கமாட்டேன். ஏதாவது ஒரு வேலி அருகில் விழுந்துகிடந்தாலும் கிடப்பேன், இந்தப் பாவக் குடிசையில் இராப்பொழுது தங்க மாட்டேன். கடவுள் மன்னிப்பாராக! [வெளியேறுகிருன்.]

நிகிதா: சரி, தொலையட்டும்!

அகிம்: [மறுபடியும் கதவைத் திறந்துகொண்டு:] நிகிதா, புத்தியோடு பிழை. ஆன்ம சுத்தியைத்தான் கடவுள் விரும்புகிருர். [மறுபடியும் போய்விடுகிருன்.]

அருலினு : [கோப்பைகளை எடுத்துக்கொண்டு:] தேநீர் வேண்டுமா ? [எல்லோரும் மௌனம்.]

நிகிதா : [பலகைமீது நிமிர்ந்து படுத்துக்கொள் கிருன்.] ஒரே தொந்தரவுதான். வாத்தியம் எங்கே?

அருலினு : வாத்தியமா? நீதானே அன்றைக் குப் பழுதுபார்க்கக் கொடுத்தாய்! இதோ தேநீர் குடித்து விடு.

நிகிதா : எனக்கு வேண்டாம். விளக்கை அணைத்துவிடு. ஐயையோ ! இது என்ன தொந்தரவு! வீண் தொந்தரவு ! [விம்மி அழுகிருன்.]

மூன்றும் அங்கம் முற்றும்.

---

## நான்காம் அங்கம்

[இலையுதிர் காலம். மாலைப் பொழுது. சந்திரன் வெள்ளிய நிலவொளி பரப்பிக் கொண்டு உதிக்கிறான். வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு ஒரு குடிசையின் தாழ்வாரமும் முற்றமும் தெரிகின்றன. வலதுபக்கம், பனிக்காலத்தில் வாழத்தக்க இடமும் வெளிக்கதவும். இடதுபக்கத்திலே, கோடைகாலத்தில் வாழத்தக்க இடமும் ஒரு நிலவறையும். குடிசையின் தாழ்வாரத்துக்கு வலப்புறத்தில் ஒரு கொட்டில். கள்வெறியைப் புலப்படுத்தும் கூக்குரல் குடிசையினுள் ளிருந்து எழுகிறது. அயல் வீட்டுக்காரிகள் இருவர் இக் குடிசையினின்று வெளியே வந்து தங்களுக்குள் பேசிக்கொள்ளுகிறார்கள்.]

*ஒருத்தி :* ஏது, அகுலினா வெளியே வருவதில்லை ?

*மற்றொருத்தி :* அதுவா? வெளியே வர அவளுக்கு ஆசையாய்த்தா னிருக்கும். ஆனால், கொஞ்ச நாளாய் உடம்பு சரியில்லை. இவளைப் பெண் பேசி வந்திருக்

கிறார்களே, அவர்கள், இவளைப் பார்க்கணும் என்கிறார்கள். இவளோ, படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள். என்ன செய்வது ?

முதல் பெண் : அப்படி என்ன உடம்புக்கு ?

மற்றவள் : ஏதோ திருஷ்டியாம்......உம்......அவளுக்கு...இடுப்புவலி கண்டிருக்கிறதாம் !

முதல் பெண் : [ஆச்சரிய மடைந்து :] விளையாட்டில்லையே ? நிஜமாகவா ?

மற்றவள் : வேறென்ன இருக்க முடியும்? [காதோடு காதாய் ஏதோ சொல்லுகிறாள்.]

முதல் பெண் : ஓ! பின்னே இது அவர்களுக்குத் தெரிந்துவிடுமே ?

மற்றவள் : அவர்களுக்குத் தெரியாது. எல்லோரும் குடிமயக்கத்தில் இருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு வேண்டியதெல்லாம் பணம் ஒன்று தான். அவளுக்குக் கொடுக்கப்போகும் பணத்தை நினைத்து மயங்கிவிட்டார்கள். இருநூறு ரூபிள். இந்தக் காலத்தில் யார் கொடுக்கிறார்கள் ?

முதல் பெண் : பணம் இருக்கட்டும். அவமானமில்லையா ?

மற்றவள் : உஸ் ! அதோ மாப்பிள்ளையின் தகப்பனர் வருகிறார். [பேச்சை நிறுத்திவிட்டுக் குடிசைக்குள் போகிறார்கள்.]

[மாப்பிள்ளையின் தகப்பன் குடிசையினுள்ளிருந்து வருகிறான்.]

அவன் : அப்பப்பா, என்ன புழுக்கம் ! கொஞ்ச நேரம் வெளியே உலாவி வருவோம்....இங்கிருப்பதே

என்னவோ போலிருக்கிறது. மனதுக்கு உற்சாகமா யில்லே.

[மாத்ரோனு குடிசையி லிருந்து வருகிருள்.]

மாத்ரோனு : உங்களேத்தான் தேடிக்கொண் டிருந்தேன். நல்ல வேளே, கண்டுகொண்டேன்...... நானே தற்பெருமை பேசுவது சரியல்ல. இருந்தா லும் உள்ளதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லே பாருங்கள். நிச்சயமாகச் சொல்லுகிறேன். இந்தக் கலியாணத்தை முடித்து வைத்ததற்காக உங்கள் ஆயுள் முழுதும் நீங்கள் நன்றிசெலுத்தப் போகிறீர் கள். அவளேப்போன்ற பெண் இந்தத் தேசம் முழுதும் தேடினுலும் கிடையாது.

அவன் : அது சரிதான். பணவிஷயம் எப்படி ?

மாத்ரோனு : அதற்கென்ன, அதைப்பற்றிக் கவலேப்பட வேண்டாம். அவள் தகப்பனுரிடமிருந்து அவ்ளுக்குக் கிடைத்த பணமனேத்தும் மாப்பிள்ளேக் குத்தான். நூற்றைம்பது ரூபிள் ! அவ்வளவும் அவள் புருஷனுக்குத்தான்.

அவன் : அதுசரி. எல்லாம் எங்கள் பையனுக் குத்தானே ! இனிமேல் அவன் நன்மைதானே முக்கியம் ?

மாத்ரோனு : முக்கியமாக என்னுல்தான் இந் தக் கலியாணம் நிச்சயமாயிற்று. கார்மிலின் குடும் பத்தில் ஒருவனுக்கு இவளேக் கேட்டார்கள். நான் தான் கூடாது என்று சொல்லிவிட்டேன். பணத் தைப்பற்றிக் கேட்டீர்களே ? உண்மையாகச் சொல்

னுகிறேன். கேளுங்கள் : இவள் தகப்பனர் இறக்கும் போது தன் மனைவியை மணந்துகொண்டு, நிலபுலங் களைப் பார்த்துக்கொள்ளும்படி நிகிதாவுக்குச் சொன் னர். ரொக்கப் பணத்தை நிகிதாவிடம் கொடுத்து, பெண்ணுக்குக் கலியாணமாகும்பொழுது அந்தத் தொகை முழுவதையும் பெண்ணிடம் கொடுத்துவிட வேண்டும் என்று சொன்னர். இதற்கு எழுத்து ஆதா ரம் ஒன்றும் கிடையாது. வேருெருவனு யிருந்தால், பணம் முழுவதையும் அபகரித்துக்கொண்டிருப்பான். நிகிதா அப்படிப்பட்டவனல்ல. ஆகவே, எல்லாவற் றையும் அவளிடம் கொடுத்துவிடப் போகிருன்.

அவன் : அவர் சாகும்போது நிரம்ப ரொக்கம் இருந்ததாக அக்கம்பக்கத்தார் சொல்லிக் கொள்ளு கிருர்களே !

மாத்ரோனு : பிறர் கையிலிருக்கும் பணம் நமக் குப் பெரிதாகத்தான் தோன்றும். அவளுக்குக் கிடைத்த பணத்தை வஞ்சகமில்லாமல் அப்படியே கொடுத்து விடுவான். அதைப்பற்றிச் சந்தேகம் வேண்டாம். இந்தப் பெண் கிடைக்குமா பாருங்கள். எத்தனை அழகு ?

அவன் : நீங்கள் சொல்லுவது சரிதான். அவளை வெளியே காணவேயில்லையே ? ஒருவேளை, அவளுக்கு வியாதி ஏதாவது உண்டோ என்று நினைத்தோம்.

மாத்ரோனு : வியாதியா ?......உம்......அவளுக் கா ?......அவளைப்போல அழகும், தேகபலமும் வசீ கரமும் உள்ள பெண் இந்தப் பக்கத்திலேயே கிடை யாது. முன்னெரு தடவை நீங்கள் பார்த்திருக்கிறீர் களே ? வேலையில் ரொம்பத் துடி. காது கொஞ்சம்

கேட்காது; ஆனல் அதற்கென்ன? சந்திரனுக்குக் கூடத்தான் களங்கமிருக்கிறது. அவள் வெளியே வராததற்குக் காரணம், திருஷ்டிதான். யாருடைய திருஷ்டி பட்டிருக்கிறது என்பதும் எனக்குத் தெரியும். இதை நீக்குகிற வழியும் எனக்குத் தெரியும். நாளைக்கு எழுந்திருந்து வெளியே வந்துவிடுவாள். அதைப்பற்றிக் கவலை வேண்டாம்.

அவன்: அது சரி. அப்பொழுதேதான் சம்மதம் தெரிவித்து விட்டேனே! இனி மாறுதல் கிடையாது.

மாத்ரோனு: நல்லது. என்னை மறந்துவிடக் கூடாது. எனக்கு எவ்வளவோ தொந்தரவுகள். என்னை மறந்துவிடக் கூடாது.

[குடிசையி லிருந்து ஒரு பெண்குரல் கேட்கிறது.]

குரல்: நேரமாய் விட்டது. இங்கே வாருங்கள். புறப்படலாம்.

அவன்: இதோ வந்துவிட்டேன். [இருவரும் போகிறுர்கள். விருந்தினர்க ளனைவரும் குடிசையி னுள்ளிருந்து கூட்டமாக வெளியே வந்து, தங்கள் தங்கள் ஊருக்குப் புறப்படுகிறுர்கள்.]

அன்னு: [குடிசையிலிருந்து வெளியே வந்து, குடிச்சையை நோக்கித் திரும்பி நின்று பேசுகிறுள்.] அம்மா!

அநிஸ்யா: [உள்ளிருந்தபடியே:] என்ன?

அன்னு: இங்கே வா, அம்மா. இல்லாவிட்டால் எல்லோர் காதிலும் விழும்.

[அநிஸ்யா வெளியே வருகிருள். இரு வருமாகக் குடிசைக்கு வலதுபுறமிருக் கும் கொட்டிலுக்குப் போகிருர்கள்.]

அநிஸ்யா: என்ன சமாசாரம்? அகுலினு எங்கே?

அன்ஞு: அவள் கொட்டிலுக்குள் இருக்கிருள். 'ஓ!' வென்று கூச்சலிடுகிருள். 'ஐயையோ தாங்க முடியவில்லேயே?' என்கிருள். அவளேப் பார்க்கத் தான் உன்னேக் கூப்பிட்டேன்.

அநிஸ்யா: அவர்களே யெல்லாம் அனுப்பி யாகட்டும்.

அன்ஞு: அம்மா, அவள் பேசியதை யெல்லாம் நீ கேட்கவில்லேயே? 'எனக்கு எதற்குக் கலியாணம்? முடியாது. நான் செத்துப்போய் விடுகிறேன்' என் கிருள். ஒருவேளே செத்துப்போய் விடுவாளோ? எனக்கு பயமாயிருக்கிறது, அம்மா!

அநிஸ்யா: அவளொன்றும் சாகமாட்டாள். அந்தப் பயம் வேண்டாம் உனக்கு. அவள் பக்கம் போகாதே. என்னேடு வா. [அநிஸ்யாவும், அன்ஞு வும் வெளியே போகிருர்கள்.]

[மிட்ரிக் வெளிக் கதவின் வழியே முற் றத்துக்கு வருகிருன். கீழே சிதறிக் கிடக்கும் வைக்கோலேச் சேகரிக்கிருன்.]

மிட்ரிக்: அப்பா! என்ன நாற்றம்! கணக்கு வழக்கில்லாமல் சாராயப் புட்டியைக் காலிசெய்து விட்டார்களே! வெளியேகூட அந்த நாற்றம் சகிக்க முடியவில்லேயே? வைக்கோலே யெல்லாம் ஏன் இப்

படிச் சிதறிப் போட்டிருக்கிறார்கள்? [கொட்டாவி விடுகிறான்.] தூக்கம் வருகிறது. குடிசைக்குள்ளே தூங்கமுடியாது. இங்கேயே இவ்வளவு நாற்ற மடித்தால், உள்ளே கேட்கவேண்டுமா? [விருந்தி னர் வண்டிகள் பாதையோடு செல்லுகிற சத்தம் கேட்கிறது.] அப்பா! ஒருவகையாகத் தொலைந்தார் கள்.

[நிகிதா வருகிறான்.]

நிகிதா: மிட்ரிக், நீ போய்ப் படுத்துக்கொள். நான் பார்த்துக்கொள்ளுகிறேன் இதை.

மிட்ரிக்: சரி......அவர்களை யெல்லாம் வழி யனுப்பி விட்டு வந்தீர்களாக்கும்?

நிகிதா: ஆமாம். ஒரே குழப்பமா யிருக்கிறது. என்ன செய்வதென்று தெரியவில்லை.

மிட்ரிக்: குழப்பம் எதற்கு? அனாதை ஆஸ்பத் திரிதான் இருக்கிறதே? அங்கே ஒரு கேள்விகூட இல்லாமல் குழந்தைகளைப் பெற வசதிபண்ணி யிருக் கிறார்களே! அதோடுகூட, குழந்தையின் தாய் மற் றக் குழந்தைகளுக்குப் பால்கொடுக்கச் சம்மதித் தால் பணம், வேறு கிடைக்குமே!

நிகிதா: கண்டபடி உளருதே!

மிட்ரிக்: ஆமாம். எனக்கென்ன? உங்கள் காரி யத்தை நன்றாக மூடிவைத்துக்கொள்ளுங்கள்.

[வெளியே போகிறான். நிகிதா நெடுநேரம் மௌனமாயிருக் கிறான். பிறகு சாமான் இழுக்கும் வண்டி யொன்றில் உட்கார்ந்து கொள்கிறான்.]

நிகிதா: ஏதோ ஆபத்துத்தான்.

[அநிஸ்யா வருகிறுள்.]

அநிஸ்யா: இங்கேயா இருக்கிறீர்கள்?

நிகிதா: ஆமாம். கண் தெரியவில்லையோ?

அநிஸ்யா: இங்கே என்ன வேலே? நேரத்தை வீணுக்காதீர்கள். சீக்கிரம் காரியம் ஆகட்டும்.

நிகிதா: காரியமா? அது என்னது?

அநிஸ்யா: நீங்கள் என்ன செய்யவேண்டுமென்று இதோ சொல்லிவிடுகிறேன். அதன்படி செய்தாகவேண்டும்.

நிகிதா: உம்! அதை அனுதை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லலாமா?

அநிஸ்யா: அப்படியானுல், நீங்கள்தான் எடுத்துச் செல்லவேண்டும். இவ்வளவு கஷ்டம் வருமே என்று முன்னுலே யோசனே செய்தீர்களா?

நிகிதா: இப்பொழுது என்ன செய்வது?

அநிஸ்யா: நிலவறைக்குப்போய் ஒரு குழி தோண்டுங்கள்.

நிகிதா: வேறு வழியில்லையா? இதுதான் முடிவா?

அநிஸ்யா: [அவன் பேசுவதைக் கேலிசெய்யும் பாவனேயில்:] வேறு வழியா? அதைப்பற்றி ஒரு வருஷத்துக்கு முன் யோசனே செய்திருக்கவேண்டும். இப்பொழுது நான் சொல்லுகிறபடி செய்தாக வேண்டும்.

நிகிதா : ஐயையோ ! கடவுளே !

[அன்னு வருகிருள்.]

அன்னு : அம்மா, பாட்டி கூப்பிடுகிருள். அக்காவுக்கு ஒரு குழந்தை பிறந்திருக்கிறதுபோ லிருக்கிறது. ஆமாம். அந்தக் குழந்தை அழுகுரல்கூடக் கொஞ்சநேரத்துக்கு முன் என் காதில் கேட்டது.

அநிஸ்யா : சரி சரி. உன்னிடம் இதையெல்லாம் யார் கேட்டது? பூனைக்குட்டிகள் சண்டையிடுவதைக் கேட்டுவிட்டுக் குழந்தை அழும் சத்தம் என்கிருயே ? உள்ளேபோய்ப் படுத்துத் தூங்கு.

அன்னு : உம்! உண்மையாகச் சொல்லுகிறேன்.

அநிஸ்யா : [அடிப்பதற்காகக் கையை ஓங்குகிருள்.] அறைந்துவிடுவேன். போ, போ! சந்தடி பண்ணுதே. [அன்னு குடிசைக்குள் ஓடிப்போகிருள். நிகிதாவைப் பார்த்து அநிஸ்யா பேசுகிருள்.] நான் சொல்வதுபோலச் செய்யவேண்டும். வேறு வழியில்லை. [வெளியே போகிருள்.]

நிகிதா : [சற்றுநேரம் மௌனமா யிருக்கிருன். பிறகு தனக்குத் தானே பேசிக்கொள்ளுகிருன்.] இந்தப் பெண்களுக்கு இருக்கிற நெஞ்சழுத்தம் வேறு யாருக்குண்டு? ஒரு வருஷத்துக்கு முன்னுலேயே யோசித்திருக்க வேண்டுமாம்! மோகம் மிஞ்சிப்போனுல், முன் யோசனைக்கு ஏது இடம்? இந்த அநிஸ்யா நான் சொன்னபடி ஆடிவந்தாள். அது ஒரு காலம்...நான்தான் என்ன செய்யமுடியும்? நான் என்ன துறவியா? எஜமானர்

இறந்தார். உடனே என் பாவத்துக்குப் பரிகாரமாக அவளை விவாகம் செய்துகொண்டேன். அதிலே ஒன்றும் தப்புக் கிடையாது...அப்புறம், உம்...இந்தப் பொடி......நான அவளை அதைச் செய்யத் தூண்டினேன்? முன்னலேயே எனக்குத் தெரிந்திருந்தால் அவளைக் கொன்று தொலைத்திருப்பேன். ஆமாம். அவளை அப்பொழுதே தொலைத்திருக்கவேண்டும். எத்தனைக் கொலை பாதகத்துக்கு என்னை அவள் உடந்தையாக்கிவிட்டாள்! இந்தப் பொடி விஷயத்தைப்பற்றி அம்மா சொன்னதிலிருந்து, இவளை விஷப் பாம்பைப் போலத்தான் வெறுக்கிறேன். காணவே சகிக்கவில்லை. அப்புறம் இவளோடு கூடி வாழ்வதெப்படி? இதுதான் இந்த இரண்டாவது பாவத்துக்குக் காரணம். அந்தப் பெண் எப்போது பார்த்தாலும், என்னைச் சுற்றிக்கொண்டே வந்தாள். என் மனம் மட்டும் ஒரே நிலையிலிருக்க முடியுமா? இதனாலே, இந்தச் சம்பவத்துக்கும் நான் பொறுப்பாளியல்ல. இந்தப் பெண்கள் இருக்கிறார்களே, இவர்களுக்குத்தான் எவ்வளவு துணிச்சல்? இவர்கள் போட்ட திட்டத்தை நிறைவேற்றுவதற்கு என்னைக் கருவியாக உபயோகிக்கப் பார்க்கிறார்கள். இவர்களுக்கு நான் ஏமாந்தவன என்ன?

[ஒரு மண்வெட்டியும் விளக்கும் எடுத்துக்கொண்டு மாத்ரோனா வருகிறாள்.]

மாத்ரோனா: அநிஸ்யா உன்னிடம் சொல்லியிருப்பாளே! அதைச் செய்யத் தயாராயிரு.

நிகிதா: என்ன செய்யப்போகிறீர்கள்?

மாத்ரோனு: என்ன செய்ய வேண்டுமென்பது எங்களுக்குத் தெரியும். உன் பங்கை நீ செய்தாக வேண்டும்.

நிகிதா: பெரிய சங்கடத்தில் என்னை மாட்டி வைக்கப் பார்க்கிறீர்கள்.

மாத்ரோனு: பின்வாங்கவா யோசிக்கிருய்? இவ்வளவு தூரம் கதை வளர்ந்துவிட்டதற்கப்புறம் பின்வாங்குவதாவது?

நிகிதா: இதைப் போல் பாவம் உண்டா? அது...வாயில்லா உயிராச்சே?

மாத்ரோனு: வாயில்லா உயிரா? அது உயிரோடிருப்பதனுலே யாருக்குப் பிரயோசனம்? அனுதை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப் போகிருயா? அங்கேயும் அது உயிரோடிருக்கப்போவதில்லை. தவிர, ரகசியமும் வெளியாகிவிடும். அப்புறம், அகுலினுவை வீட்டைவிட்டு வெளியேற்ற முடியாது.

நிகிதா: உங்கள் சதி வெளியாகிவிட்டால்....?

மாத்ரோனு: யாருக்கும் சந்தேகம் தோன்ருதபடி வீட்டுக்குள்ளேயே எல்லாவற்றையும் முடித்துவிடலாம். நான் சொல்லுகிறபடி செய். இதோ, நான் விளக்கைத் தூக்கிப் பிடித்துக்கொள்ளுகிறேன். நீ மண்வெட்டியை எடுத்துக்கொண்டு நிலவறைக்குள் போ.

நிகிதா: அங்கே போய் நான் என்ன செய்ய வேண்டும்?

மாத்ரோனு: ஆழமான குழி தோண்டவேண்டும். அதற்குள்ளே நாங்கள் அதைக் கொண்டுவருகிருேம். எல்லாம் ஒரு நிமிஷத்தில் முடிந்துவிடும்.

நிகிதா: உம்...அது இறந்துபோய் விட்டதா?

மாத்ரோனு: ஆமாம். இன்னுமா உயிரோடு இருக்கப்போகிறது? நீ மட்டும் சீக்கிரமாய் வேலையை முடித்துவிட வேண்டும். இல்லாவிட்டால் யாராவது பார்த்து விடுவார்கள். [அவன் கையில் மண்வெட்டியைக் கொடுத்து:] உம்...ஒரு மூலையில் குழியை வெட்டு. மூலையிலே கல்லோ பாறையோ இருக்காது. பூமாதேவியினிடம் ரகசியத்தை ஒப்படைக்கலாம்; அவள் அதை வெளிவிட மாட்டாள். பத்திரமாய்க் காப்பாற்றி வருவாள். போ! உள்ளே போ.

நிகிதா: என்னைப் பாவப் படுகுழியில் வீழ்த்தி விட்டீர்கள்......ஊஹூம்......இது என்னல் முடியாது. நான் ஓடிவிடப் போகிறேன். நீங்கள் என்ன வேண்டுமானுலும் செய்துவிட்டுப் போங்கள்.

அநிஸ்யா: [கதவு வழியாக:] என்ன? குழி தோண்டியாகி விட்டதா?

மாத்ரோனு: ஏன் தாமதம்? இவ்வளவு நேரம் என்ன செய்துகொண்டிருந்தாய்?

அநிஸ்யா: அதைப் பழந்துணியில் சுற்றிவைத்திருக்கிறேன். குழி தோண்டி விட்டாரா அவர்?

மாத்ரோனு: அவன் தோண்டமாட்டானும்.

அநிஸ்யா: [மிகுந்த கோபத்தோடு:] உம்... அவருடைய குற்றத்தை இப்போதே போய்ப் போலீசுக்குத் தெரியப்படுத்தி விடுவேன்!

நிகிதா : [பின்னடைந்து :] என்ன சொல்லு வாய் ?

அநிஸ்யா : எல்லாவற்றையும். பணத்தை எடுத்துக்கொண்டது யார் ? நீதான். விஷங் கொடுத்தது யார் ? நான். ஆனல் உனக்குத் தெரியும். ஆம். நீயும் நானும் உடந்தையா யிருந்துதான் உயிருக்கு உலை வைத்தோம்.

மாத்ரோனு : உம்...போதும் ! நிகிதா, உனக்கு ஏன் இந்தப் பிடிவாதம் ? இப்பொழுது பின்வாங்கலாமா ? கஷ்டப்பட்டுத்தான் ஆகவேண்டும். உம் ! சீக்கிரம்.

அநிஸ்யா : பார், இவர் மிகவும் யோக்கியர். இவருக்குப் பிடிக்கவில்லையாம் !...நீ என்னை என்ன பாடு படுத்தியிருக்கிறுய் ! என் ஆசையை யெல்லாம் காலின்கீழ்ப் போட்டு நசுக்க வில்லையா? யானைக்கொரு காலம் வந்தால் பூனைக்கொரு காலம் வராதா ? இப்பொழுது பூனைக்குக்காலம்....உம்.....போ கீழே !

நிகிதா : நாசமாய்ப் போக ! [மண்வெட்டியை எடுத்துக் கொள்ளுகிறுன். ஆனல் நடுங்குகிறுன்.] ஊஹூம்...முடியவே முடியாது. என்னல் முடியாது.

அநிஸ்யா : கூச்சல் போடுவேன் !

மாத்ரோனு : [ஓடிப்போய் அவள் வாயைப் பொத்துகிறுள்.] உம்...உனக்குப் பைத்தியமா என்ன ? நிகிதா, என்னப்பா, ஏன் இவ்வளவு யோசனை ? உம் ! போ.

நிகிதா : சீக்கிரம் கொண்டு வாருங்கள்.

[நிலவறையை நோக்கி நடக்கிறுன்.]

மாத்ரோனு : ஆம் ! சந்தோஷமா யிருக்கிற காலத்தில் தலைகால் புரியாமல் நடந்துகொண்டால், பிற்காலத்தில் அந்த நடத்தையின் விளைவுகளையும் சகித்துக்கொள்ள வேண்டியது தானே !

அநிஸ்யா : [இன்னும் சஞ்சலத்துட னிருக்கிருள்.] அவனும், அந்தச் சிறுக்கியும் ஒன்றுசேர்ந்து கொண்டு, என்னை என்ன பாடு படுத்திவைத்தார்கள் ! நான் கொலைகாரி. நான் மட்டும் தனியாகவா பாவத்தைச் சுமக்க வேண்டும் ? அவனும் கொலை பாதகத்தைச் செய்து என் கூட்டாளி யாகட்டுமே !

மாத்ரோனு : உம்...இப்பொழுது கோபமெதற்கு அம்மா ! நீ போய் அதைக் கொண்டு வா. அதற்குள் இங்கே அதற்கான இடம் தயாராகிவிடும்.

[நிகிதாவைப் பின்பற்றி நிலவறையின் வாசலுக்குப் போகிருள். அறைக்குள் நன்ருக வெளிச்சம் தெரியும்படி விளக்கை தூக்கிப் பிடித்துக் கொள்ளுகிருள்.]

அநிஸ்யா : அவன் செய்த பாவத்தின் சின்னத்தை அவனே அழிக்கட்டும் ! பீட்டருடைய ஆவி என்னை வேதனைப்படுத்துவதுபோல, ஒரு பாவமுமறியாத இந்தக் குழந்தையின் ஆவி, என்றென்றும் அவன் மனதிலே சாந்தி யில்லாதபடிச் செய்யட்டும் !

நிகிதா : [நிலவறையி னுள்ளிருந்து :] நன்ருய்க் காட்டு. வெளிச்சம் போதாது.

மாத்ரோனு : [விளக்கை உயர்த்திப் பிடிக்கிருள்.] உம்...நீ போய் அதைக் கொண்டுவா.

அநிஸ்யா : நீங்கள் இருங்கள். நான் போய்க் கொண்டுவருகிறேன்.

மாத்ரோனு : குழந்தைக்கு ஞானஸ்நானம் செய்விக்க வேண்டாமா? நானே அந்தக் கிரியையைச் செய்து வைக்கிறேன். ஒரு சிலுவை யிருந்தால் எடுத்து வா.

அநிஸ்யா : தேடிப் பார்த்து எடுத்து வருகிறேன்.*

[வெளியே போகிருள்.]

மாத்ரோனு : இந்தச் சிறுக்கி என்ன பேச்சுப் பேசுகிருள்! இந்த வேலை சீக்கிரம் முடியட்டும், அப்புறம் கவலையற்றிருக்கலாம். அகுலினுவை எவனுக்காவது கட்டிக் கொடுத்து வீட்டைவிட்டுத் துரத்திவிட வேண்டும். அப்புறம் என் மகன் சஞ்சலமில்லாமல் வாழ்வான். என்னை அவன் மறக்க முடியமா? மாத்ரோனு இல்லாவிட்டால் அவனுக்கேது இந்தச் சொத்தும் சுகமும்? [நிலவறையைப் பார்க்கிருள்.] முடிந்துவிட்டதா?

நிகிதா : [வெளியே தலையை நீட்டி :] ஏன் இவ்வளவு தாமதம்! ஒரேயடியாக இந்த வேதனை முடியட்டுமே? சீக்கிரம்! உம்......

---

குறிப்பு : படிப்பதற்காகவே இந்த நாடகத்தை டால்ஸ்டாய் முதன் முதலில் எழுதினர். நடிப்பதற்காக இந் நாடகத்தைத் திருத்தி யமைத்தபோது, * குறியிட்ட கட்டத்தில் இந்தக் காட்சியை முடித்துவிட்டு, புதுக்காட்சி யொன்றைச் சேர்த்தார். வாசிப்பதற்காகவே இந் நாடகத்தை மொழிபெயர்த்திருக்கிறபடியால், முதல் மூலத்திலுள்ள கதையமைப்பையே இங்குக் காணலாம்.

[மாத்ரோனு கதவுப்பக்கம் போகிருள். அநிஸ்யா எதிரில் வந்து அவளைச் சந்திக்கிருள். பழந்துணியில் சுற்றிய ஒரு சிசுவை எடுத்துவருகிருள்.]

மாத்ரோனு: ஞானஸ்நானம் செய்வித்தாயா?

அநிஸ்யா: ஆமாம், பண்ணினேன்......அவள் லேசில் இதைக் கொடுக்க மாட்டேன் என்ருள். கையைத் திருகிப் பிடுங்கிக்கொண்டு வந்தேன். [முன் வந்து, குழந்தையை நிகிதாவிடம் கொடுக்கிருள்.]

நிகிதா: [குழந்தையை வாங்க மறுத்து:] நீயே கொண்டு வா!

அநிஸ்யா: [தள்ளி நின்றபடியே பந்தை எறிவதுபோல அவனை நோக்கிக் குழந்தையை எறிகிருள். அவன் பிடித்துக் கொள்ளுகிருன்.] எடுத்துக் கொள்!

நிகிதா: ஐயையோ! உயிரோடிருக்கிறதே! அதன் உடல் அசைகிறதே!

அநிஸ்யா: [அவன் கையிலிருந்த குழந்தையைப் பிடுங்கி அறைக்குள் எறிகிருள்.] மூச்சைப் பிடி. அப்புறம் உயிரிருக்காது. அதைப் பெற்றவன் நீ. நீதான் அதைக் கொல்லவேண்டும். விதி அப்படி!

[நிகிதாவைப் பிடித்து உள்ளே தள்ளுகிருள்.]

மாத்ரோனு: அவனுக்கு இளகியமனம். உம்... என்ன செய்வது? [அநிஸ்யா நிலவறையின் வாசலில் நின்று கொண்டிருக்கிருள்.]

மாத்ரோனு : [அநிஸ்யாவிடம்:] இதோ பார். எத்தனை பேர் குழந்தையில்லை என்று குழந்தை வரம் வேண்டித் தவங்கிடக்கிருர்கள் ? அவர்களுக்குக் கடவுள், குழந்தை வரம் அருளுவதில்லை. இங்கே யார் குழந்தை யில்லை என்று அழுதார்கள் ? இங்கே பிறந்ததோடு மட்டுமில்லாமல், கொன்ருலும் சாகாது போலிருக்கிறதே ! [நிலவறைக்குள் பார்க்கிருள்.] அநிஸ்யா, என்ன செய்கிருன் என்று பார் !

அநிஸ்யா : [நிலவறைக்குள் நன்ருக உற்றுப் பார்த்து] குழந்தையைத் தரையிலே கிடத்தி அதன் மேலே ஒரு பலகையைப் போட்டு அதன் மேலேறி உட்கார்ந்திருக்கிருர். இதற்குள் அதன் தலையெழுத்து முடிந்துபோயிருக்கும்.

மாத்ரோனு : பாவமே செய்யாம லிருப்பது எவ்வளவோ நல்லது. ஆனல், இப்படி அகப்பட்டுக் கொண்ட பிறகு என்ன செய்வது ?

[நிகிதா நிலவறையிலிருந்து வெளியே வருகிருன். அவன் உடல் முழுதும் நடுங்குகிறது.]

நிகிதா : இன்னும் அதற்கு உயிர் போகவில்லை, அப்படியே இருக்கிறது !

அநிஸ்யா : பின் எங்கே ஓடுகிறீர்கள் ?

[அவனைத் தடுக்க முயலுகிருள்.]

நிகிதா : [அவளை நோக்கிப் பாய்கிருன்.] போ, தூர ! உன்னைக் கொன்று விடுவேன் !

[அவள் கைகளை எட்டிப் பிடிக்கிருன். அவள் தன்னை விடுவித்துக்கொள்ளு கிருள். அவன் மண்வெட்டியை ஓங்கிக்கொண்டு அவள் பின்னுலே ஓடு கிருன். மாத்ரோனு பயந்து ஓடிப் போய், அவனைத் தடுக்கிருள். அநிஸ்யா வெளியே ஓடிப்போகிருள். நிகிதாவின் கையி லிருக்கும் மண்வெட்டியை மாத்ரோனு பிடுங்க முயல்கிருள். அவன் மாத்ரோனுவைப் பார்த்து:]

உன்னையும் தொலைத்து விடுவேன்! எல்லோ ரையும் கொன்று விடுவேன்.

[மாத்ரோனு, அநிஸ்யாவிடம் போய் அவளோடு சேர்ந்து நின்றுகொள்ளு கிருள்.]

மாத்ரோனு: பயப்படாதே அநிஸ்யா! அவன் பயத்தினுல் இப்படி வெறிபிடித்தவன்போல நடந்து கொள்ளுகிருன்.

நிகிதா: என்னை ஏன் இப்படி யாக்கிவிட்டார் கள்! ஐயையோ! குழந்தை மூச்சடைக்கக் கதறியது இன்னும் என் காதில் கேட்கிறதே! இன்னும் உயி ரோடுதான் இருக்கிறது. ஏன் இப்படிக் கதறுகிறது?

[நிலவறைப்பக்கம் ஓடுகிருன்.]

மாத்ரோனு: [அநிஸ்யாவிடம்:] அவன் நில வறைக்குப் போகிருன். அதைப் புதைக்கப் போகி ருன் போலிருக்கிறது. [நிகிதாவைப் பார்த்து:] நிகிதா, விளக்கை எடுத்துக்கொண்டு போ.

நிகிதா : [அவள் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே, நிலவறையின் கதவினருகே நின்று கூர்ந்து கவனிக்கிறான்.] ஒன்றும் கேட்க வில்லையே! எல்லாம் வீண் பிரமை போலிருக்கிறது. அதன் இளமையான எலும்புகள் நொறுங்கிய சத்தம் எவ்வளவு பயங்கரமாயிருந்தது! கிர்......கிர்...... [மறுபடியும் காது கொடுத்துக் கேட்கிறான்.] ஓ! அல றித் துடிக்கிற சத்தம் கேட்கிறதே! ஆம்! ஆனால் எப் படி இருக்கமுடியும்? அம்மா! அம்மா! இங்கே வா.

[அவனே போகிறான்.]

மாத்ரோனா : என்ன அப்பா?

நிகிதா : என்மேல் இரக்கமில்லையா உனக்கு!

மாத்ரோனா : எவ்வளவு பயமடா அப்பா உனக்கு! முகமெல்லாம் வெளுத்துப்போய் விட் டதே! உள்ளே வந்து கொஞ்சம் மது அருந்து, சரி யாகப் போய்விடும்.

நிகிதா : அம்மா, எனக்கு இவ்வுலக வாழ்க்கை முடிந்துவிட்டது! ஐயையோ, குழந்தை எலும்பு நொறுங்கின சத்தம் இன்னும் காதைவிட்டு அகல மாட்டேன் என்கிறதே! ஐயையோ, என் சொந்தத் தாயே எனக்கு எமனாக வந்து முளைத்தாள். [மெது வாக நடந்துபோய் ஒரு பார வண்டியின்மீது உட் காருகிறான்.]

மாத்ரோனா : வா, அப்பா! ஒரு கிண்ணம் மது அருந்து. இப்பொழுது மனம் கலங்கத்தான் செய் யும். நாளாக ஆக மனம் தெளிந்துவிடும். இந்தச்

சம்பவத்தைப் பற்றிய விவரங்களையே மறந்து போவாய். கொஞ்சநாள் போகட்டும். அவளுக்கும் கலியாணமாகட்டும். எல்லாம் மறந்துபோகும். நிலவறையில் இனிமேல் ஆகவேண்டியதை நான் கவனித்துக் கொள்ளுகிறேன்.

நிகிதா : [எழுகிறான்:] வாட்கா எவ்வளவு பாக்கியிருக்கிறது? முழுவதையும் குடித்து விடப் போகிறேன். [வெளியே போகிறான்.]

[வாசலண்டை நின்று கொண்டிருக்கும் அநிஸ்யா ஒன்றும் பேசாமல் அவனுக்கு வழி விடுகிறாள்.]

மாத்ரோனா : மண்வெட்டி எங்கே? நானே போய்க் குழிதோண்டிப் புதைத்து விடுகிறேன். [கீழே கிடக்கும் மண்வெட்டியை எடுத்துக்கொண்டு நிலவறைக்குள் இறங்குகிறாள்.] அநிஸ்யா! இங்கே வந்து கொஞ்சம் விளக்கைக் காட்டு.

அநிஸ்யா : அவர் ஏன் இப்படிப் பைத்தியம் பிடித்தவர் போல ஓடுகிறார்?

மாத்ரோனா : பயந்து விட்டான்! அவ்வளவு தான். எல்லாம் சரியாய்ப் போய்விடும். கொஞ்ச நேரம் அவனைத் தொந்தரவில்லாமல் விட்டு வை. [நிலவறைக்குள் மறைகிறாள்.]

அநிஸ்யா : [நிகிதா குடிசைக்குள் நுழைந்ததைக் கதவிடுக்கால் பார்த்துக்கொண்டு :] அதோ கண்ணை மூடிக்கொண்டு மீதியிருந்த வாட்கா பூராவையும் குடிக்கிறார். என்னவாகுமோ தெரியவில்லை!

நிகிதா : [குடிசைக்குள்ளிருந்து, நிலவறையை நோக்கி வேகமாக ஓடிவருகிருன்.] அம்மா! அதைப் புதைக்க வேண்டாம்! அதற்கு உயிர் இருக்கிறது. உம்! மூச்சடைத்து இன்னும் கத்துகிறதே! ஆமாம்.........அதோ.........

மாத்ரோனு : அது எப்படியடா கத்தும்? அதைத்தான் ஒரு அப்பளம் போல நசுக்கி விட்டாயே? தலைதான் சுக்கல் நூருக உடைந்து போய் விட்டதே!

நிகிதா : பின்னே என்னவோ என் காதில் மட்டும் கேட்கிறதே! [காதை அடைத்துக் கொள்ளுகிருன்.] இன்னும் கதறுகிறது. எனக்கு அழிவுகாலம் வந்துவிட்டது. இப்பொழுது எங்கே போவது? [நிலவறையின் படிக்கட்டில் அசையாது உட்கார்ந்து விடுகிருன்.]

நான்காம் அங்கம் முற்றும்.

---

## ஐந்தாம் அங்கம்

### முதற் காட்சி

[அகன்ற இடத்தின் நடுவே ஒரு நெற் களம். அதன் வலப்புறத்தில் ஒரு நெற் களஞ்சியம். களஞ்சியத்தின் கதவு திறந்திருக்கிறது. அதன் வாசலில் வைக்கோல் சிதறிக் கிடக்கிறது. இவற்றின் பின்னல் பழங்குடிசையும் அதன் முற்றமும் தெரிகின்றன. குடிசையிலிருந்து வாத்தியத்தை வைத்துக்கொண்டு பாடுகிற ஒலி கேட் கிறது. இளம் பெண்கள் இருவர் களஞ்சியத்தைக் கடந்து குடிசையை நோக்கிப் போகிருர்கள்.]

முதற் பெண்: முன்னமேயே சொன்னே னல்லவா, இந்த வழியாக வந்தால் அதிகமாகத் தூசு படியாதென்று! தெரு வழியாக வந்திருந்தால், துணி யெல்லாம் புழுதி மயமாய்ப் போயிருக்கும். [இரு வரும் ஓரிடத்தில் நின்று தங்கள் பூட்ஸை வைக் கோலால் துடைக்கிருர்கள். முதற் பெண் வைக் கோல்மீது யாரோ படுத்துக் கிடப்பதைக் கண்டு திடுக்கிடுகிருள்.] ஓ! இது என்ன?

இரண்டாம் பெண்: [வைக்கோல்மீது கிடக்கும் உருவம் மிட்ரிக் என்று அறிந்துகொள்ளுகிருள்.] இவன் நிகிதாவின் வேலையாள், மிட்ரிக். இதோ பார், இவனுக்கு ஆழ்ந்த குடி மயக்கம் போலிருக்கிறது.

மூ. பெண்: ஓ! அவன் குடிக்கிறதில்லையென்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்!

இ. பெண்: வழக்கமாகக் குடிக்கிறதில்லைதான். இன்று கலியாண விருந்தல்லவா?

மூ. பெண்: வைக்கோல் எடுத்துப்போக வந்தான்போலிருக்கிறது. இதோ பார்த்தாயா? அவன் கையில் ஒரு கயிறிருக்கிறது. வந்தவன் அப்படியே கீழே விழுந்து உறங்கிவிட்டான் போல் இருக்கிறது.

இ. பெண்: [குடிசையை நோக்கி:] இன்னும் *வாழ்த்துத்தான் நடக்கிறதுபோலிருக்கிறது. ஆசீர்வாதமெல்லாம் இன்னும் ஆகவில்லை. அதிருக்கட்டும், ஒரு சங்கதி, தெரியுமா? சம்பிரதாயத்துக்காகக் கூட அகுலினு † அழவில்லையாமே!

மூ. பெண்: இந்தக் கலியாணத்தில் அவளுக்குக் கொஞ்சங்கூட மனமில்லையாம். அவள் அப்பா கட்டாயப்படுத்தினதன் பேரில் தான் கலியாணம் பண்ணிக்கொள்ளச் சம்மதித்தாளாம். நிகிதாவை

---

* ருஷியக் குடியானவர் வீட்டுக் கலியாணங்களிலே, மணமக்கள் பேரில் பாட்டுக்கள் பாடி வழ்த்துவது வழக்கம்.

† தனது கன்னித்தன்மை அழியப்போவது குறித்து, ருஷிய மணமகளிர், விவாக தினத்துக்கு முந்திய நாள் அழவேண்டியது சம்பிரதாயம்.

யும் அவளையும் பற்றி ஊரில் ஒரு மாதிரியாகப் பேசிக் கொள்கிறார்களே, தெரியுமல்லவா?

[மரீனு அவர்களுக்குப் பின்புறமாக வருகிறாள்.]

மரீனு: சௌக்கியந்தானே?

பெண்கள்: ஆமாம். சௌக்கியந்தான். நீ!

மரீனு: கலியாண வீட்டுக்குப் போகிறீர்களாக்கும்!

மு. பெண்: ஆமாம்.

மரீனு: எங்கள் வீட்டுக்காரர் அங்கிருப்பார். பெயர் தெரியுமா? ஸைமன்.

மு. பெண்: தெரியுமே! மாப்பிள்ளைக்கு அவர் நெருங்கிய பந்துவல்லவா?

மரீனு: ஆமாம். மணமகன், இவருடைய மருமகன் முறை.

இ. பெண்: பின்னே நீ என் கலியாண வீட்டுக்கு வரவில்லை?

மரீனு: என்னவோ, எனக்கு அங்கே வர மனமில்லை. ஊருக்குத் திரும்ப நேரமாயிற்று. நாங்கள் கலியாணத்துக்கென்று இங்கு வரவில்லை. பட்டணத்துச் சந்தைக்குக் கோதுமை கொண்டு போகிறோம். குதிரைக்குக் கொள் வைப்பதற்காகத்தான் இங்கே தங்கினோம். அவருடைய மருமகன் கலியாணமல்லவா? அதனாலே, இதோ வந்து விடுகிறேன் என்று சொல்லிவிட்டுப் போயிருக்கிறார். போய் ரொம்ப நேரமாயிற்று. நீங்கள் அவரைக் கண்டு,

'கூட வந்தவர்கள் புறப்பட்டு விட்டார்களாம். மரீனு உங்களை அவசரமாக வரச்சொன்னுள்' என்று கொஞ்சம் சொல்லுவீர்களா?

மு. பெண்: சரி.

[இரு பெண்களும் ஓர் ஒற்றையடிப் பாதை வழியாகக் குடிசையை நோக்கி நடக்கிறுர்கள். மறுபடியும் பாட்டொலி கேட்கிறது.]

மரீனு: [தனியாக நின்று எண்ணமிடுகிறுள்.] எனக்கு அங்கே போக மனமில்லை. அவன் என்னைக் கைவிட்ட தினத்திலிருந்து இதுவரை அவனை நான் காணவில்லை. அநிஸ்யாவோடு எப்படி வாழ்கிறுன் என்றறிய ஆசை உண்டாகிறது. அவர்களுக்குள் ஒற்றுமையில்லை என்று ஊரெல்லாம் சொல்லுகிறது. ஆமாம், அவள் சுபாவம் பொல்லாதது. வறுமையின் றிச் சௌக்கியமாக வாழலாம் என்ற எண்ணத்தி ஞல், அவன் என்னோடு வாழ்ந்த காதல் வாழ்க்கையை ஒதுக்கித் தள்ளி விட்டான். அவன்மீது எனக்கு வெறுப்பில்லை. ஆனல், அச்சமயம் என் இதயம் புண் பட்டது உண்மைதான். இப்பொழுது அந்தத் துன்ப மெல்லாம் மறந்துபோய் விட்டது. எனக்கு அந்தச் சம்பவத்தின் நினைவுகூட மறந்துபோய் விட்டது. அவனைப் பார்க்க வேண்டும் என்றுகூடச் சில வேளை களில் தோன்றுகிறது. [குடிசைப் பக்கம் திரும்பு கிறுள். குடிசைத் தலைவாசல் வழியே நிகிதா வருவ தைக் காண்கிறுள்.] இங்கே ஏன் வருகிறுன்? நானிங்கிருப்பதை அவர்கள் சொல்லி விட்டார் களோ என்னவோ? விருந்தினர்களை யெல்லாம்

கவனிக்காமல், இவன் ஏன் இங்கே வருகிருன்? உடனே நான் எங்காவது போய்விட வேண்டும். [நிகிதா, தலையைத் தொங்கவிட்டுக்கொண்டும், வாய்க்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டும், அவள் பக்கம் வருகிருன்.] அவனுக்கு ஏன் இவ்வளவு கவலை?

நிகிதா: [மரீனவை அடையாளங் கண்டு கொள்ளுகிருன்.] மரீன! எங்கே வந்தாய்?

மரீன: எங்கள் வீட்டுக்காரர் இங்கு வந்திருக்கிருர். அவரை அழைத்துப் போகத்தான் வந்திருக்கிறேன்.

நிகிதா: முகூர்த்தத்துக்கு வரக்கூடாதா? நீ அங்கு வந்து பார்த்து, என் நிலைமையை எண்ணிச் சிரிக்கலாமே!

மரீன: சிரிப்பதற்கென்ன நேர்ந்துவிட்டது? என் வீட்டுக்காரரை அழைத்துப் போகவே நான் வந்திருக்கிறேன்.

நிகிதா: என் அன்பார்ந்த மரீனவல்லவா நீ! [அவளைத் தழுவ முயல்கிருன்.]

மரீன: [கோபத்தோடு ஒரு புறமாய் விலகி நின்று:] நிகிதா, இதெல்லாம் உதவாது. நான் பழங்கால ஞாபகத்தை அடியோடு மறந்து விட்டேன்... அவர் உங்கள் வீட்டில் இருக்கிருரா?

நிகிதா: பழங்காலத்தை நான் ஞாபகப்படுத்திக்கொள்வதில் உனக்கு என்ன தடை?

மரீன: அதனல் பயன் என்ன? நம்முடைய பழைய உறவுதான் அற்றுப்போய் விட்டதே!

நிகிதா : இனிமேல் திரும்பி வராதா? அப்படித் தான் நீ தீர்மானித்து விட்டாயா?

மரீனு : இனிமேல் திரும்பி வராது...ஆனல், விருந்தினர்களே உபசரிப்பதை விட்டுவிட்டு நீ ஏன் இங்கே வந்தாய்?

நிகிதா : [வைக்கோல்மீது உட்காருகிருன்.] அதுவா? உனக்கு ஒன்றுமே தெரியாது. மரீனு, எனக்குக் கொஞ்சமும் சந்தோஷமில்லே. அதனுல் தான் விருந்தின் நடுவே எழுந்து ஓடி வந்துவிட்டேன். மனிதருறவே எனக்கு வெறுத்துப்போய் விட்டது. மனித சஞ்சாரமேயில்லாத ஒரு தனி யிடத்துக்குப் போய்விட்டால் தேவலே. உண்ணும்போதும், உறங் கும்போதும், குடிக்கும்போதும், அதே ஞாபகந் தான்! என்னே அந்த ஞாபகம் பைத்தியமாக அடித்து விட்டது. என் துன்பத்தில் பங்கு கொள்ள யாருமில்லே. தனிமையில் துன்பப்படுவது என்னே வாட்டுகிறது.

மரீனு : உன்னுடைய தீய வாழ்க்கையில் துக்க மில்லாமல் இருக்க முடியாது. நிகிதா, என் துய ரத்தை யெல்லாம் அழுது அழுது கரைத்துவிட்டேன்.

நிகிதா : பழைய துன்பத்தைச் சொல்லு கிருயா? என் துன்பம் அப்படியே இருக்கிறது.

மரீனு : ஏன்?

நிகிதா : எனக்கு வாழ்க்கையில் வெறுப்புத் தட்டிவிட்டது. மரீனு, என்னே ஏன் இப்படி அலேய விட்டாய்? ஏன் இப்படி நம்முடைய வாழ்க்கை

மனோரதங்கள் சிதறிப்போய் விட்டன? வாழ்க்கை என்றால் இவ்வளவுதானா?

மரீனா: [களஞ்சியத்தின் அருகே நின்று அழுது கொண்டிருந்தவள், சட்டென்று அழுகையை அடக்குகிறாள்.] நிகிதா, என் வாழ்க்கை சம்பந்தப்பட்டவரை நான் யாரையும் குறை சொல்லவில்லை. என் வாழ்க்கையைப்போல அமைதியான வாழ்க்கையை எல்லோருக்கும் இறைவன் அருள்புரிவாராக! என் வீட்டுக்காரரிடம் என் பாவத்தைச் சொல்லி மன்னிக்கும்படி வேண்டினேன். அவரும் என்னை மன்னித்துவிட்டார். அவருக்கு என்மேல் இப்பொழுது மனத்தாங்கல் இல்லை. அவர் என்மேல் மிகுந்த அன்பாயிருக்கிறார். நான் அவருடைய குழந்தைகளைப் பராமரித்து வருகிறேன். எனக்குக் குறை எதுவும் கிடையாது. நீதான் பணக்காரனாயிற்றே? உனக்கு வாழ்க்கையில் சலிப்பு ஏற்படக் காரணம் இல்லையே?

நிகிதா: என் வாழ்க்கையா! இந்தக் கலியாணத் தடபுடலைக் கெடுக்கவேண்டாம் என்று பேசாதிருக்கிறேன். இல்லாவிட்டால், [கீழே கிடக்கும் கயிற்றை எடுத்துக்கொள்ளுகிறான்.] இந்தக் கயிற்றை உத்திரத்தில் மாட்டி ஒரு சுருக்குப்போட்டு, அதில் கழுத்தை மாட்டிக்கொண்டு உயிரை விட்டுவிடுவேன். அப்படியிருக்கிறது என் வாழ்க்கை!

மரீனா: ஐயோ, பாவம்! கடவுள்தான் உனக்கு உதவி செய்ய வேண்டும்!

நிகிதா: நான் சொல்வது விளையாட்டல்ல! குடிவெறி என்று நினைத்தாயா? கிடையாது. மனக்

9

கவலைகள் என் நெஞ்சை அப்படியே அரித்துத் தின்றுவிடுகின்றன! என் அருமை மரீனு! உன்னைத் தவிர யாரோடும் நான் உண்மையான அன்போடு வாழ்ந்ததில்லை. உம்...முன்னெல்லாம் ரயில்வேத் தண்டவாளத்தின் பக்கத்தில் வேடிக்கையாக இராப் பொழுதைப் போக்கியது ஞாபகமிருக்கிறதா?

மரீனு: உம்.........நிகிதா, பழைய புண்ணெல்லாம் ஆறிப்போய் விட்டது. மறுபடியும் அவைகளைக் கிளருதே! நான் சட்டபூர்வமாக ஒருவருக்கு வாழ்க்கைப் பட்டிருக்கிறேன். நீயும் அப்படியே! நான் பாவ மன்னிப்பைப் பெற்றுவிட்டேன். இனி.........

நிகிதா: என் மனத்தை என்ன செய்வது என்று சொல்.

மரீனு: என்ன செய்வது? உனக்கு ஒரு மனைவி இருக்கிருள். அவளிடமே நீ அன்பு செலுத்தவேண்டும். நீ அநிஸ்யாவைக் காதலிப்பதாகச் சொன்னுய். இன்னும் அவளையே காதலிக்கப் பார்.

நிகிதா: அநிஸ்யாவா? அவள் ஒரு விஷப் பாம்பு. அவளைக் கட்டி அழுவது எப்படி?

மரீனு: எப்படியிருந்தாலும் அவள் உன் மனைவி. உம்...பேசிப் பயன் என்ன? விருந்தினர் உனக்காகக் காத்துக் கொண்டிருப்பார்கள். அப்படிக் காக்கவைப்பது சரியல்ல. போய் ஸைமனை வரச்சொல்லு.

நிகிதா: உனக்கு என் வாழ்க்கை வரலாறு முழுதும் தெரியாது......

[மரீனுவின் கணவன், குடி மிகுதியால் சிவந்த முகத்தோடு வருகிருன். அவனுக்குப் பின்னுல் அன்னு வருகிருள்.]

ஸைமன் : மரீனு, இன்னும் இங்கேயேதான் இருக்கிருயா?

நிகிதா : உன்னுடைய கணவர் கூப்பிடுகிருர். போ!

மரீனு : இங்கே நீ என்னசெய்யப் போகிருய்?

நிகிதா : சற்றுநேரம் இங்கே படுத்து உறங்கப் போகிறேன். [வைக்கோலின் மேல் படுத்துக் கொள்ளுகிருன்.]

ஸைமன் : அவள் எங்கே?

அன்னு : அதோ, களஞ்சியத்துக்குப் பக்கத்தில் நிற்கிருள்.

ஸைமன் : அங்கே ஏன் நிற்கிருய்? உன்னை விருந்துக்கு அழைக்கிருர்கள். அவர்கள் வீட்டை விட்டுக் கோயிலுக்குப் புறப்பட்டவுடன் நாமும் புறப்பட்டுவிடலாம்.

மரீனு : [தன் கணவனைச் சமீபித்து :] எனக்குப் போக மனமில்லை.

ஸைமன் : உம், அப்படிச் சொல்லாதே. அவர்கள் ஏதாவது நினைத்துக்கொள்ளப் போகிருர்கள். பொழுதுபோவதற்கு இன்னும் எவ்வளவோ நேரமிருக்கிறதே!

[மரீனுவும், அவள் கணவனும் கையைக் கோத்துக்கொண்டு, குடிசையை நோக்கிப் போகிருர்கள்.]

நிகிதா : [எழுந்து வைக்கோலை நேரே பரப்பி உட்கார்ந்து கொள்ளுகிறான்.] இவளைச் சந்தித்த பிறகு, வாழ்க்கை எனக்கு நரக வேதனைபோல் தோன்றுகிறது. ஒருபொழுதும் என் மேலேயே எனக்கு இவ்வளவு வெறுப்பு ஏற்பட்டதில்லை. இவளோடுதான் நான் உள்ளன்பு என்ற உறவு கொண்டிருந்தது. எனக்கு நானே குழிதோண்டிக் கொண்டேன்! [மறுபடியும் படுத்துக்கொள்ளுகிறான்.] நான் எங்குத் தொலைவது? பூமி வெடித்து என்னை விழுங்கி விடக் கூடாதா?

அன்னா : [நிகிதாவைக் கண்டவுடன் அவனை நோக்கி ஓடி வருகிறாள்.] அப்பா, அப்பா, எல்லோரும் உன்னைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். உன்னைத் தவிர எல்லோரும் ஆசீர்வதித்தாகி விட்டது. எல்லோருக்கும் உன்மேல் ரொம்பக் கோபம்.

நிகிதா : [தனக்குள் :] நான் எங்கே தொலைவது?

அன்னா : என்ன சொல்லுகிறாய், அப்பா?

நிகிதா : ஒன்றுமில்லை. நீ பேசாமல் போ!

அன்னா : அப்பா, வா, அப்பா! [நிகிதா மௌனமாயிருக்கிறான். அவள் அவன் கையைப் பிடித்துத் தூக்குகிறாள்.] நீ அவர்களை ஆசீர்வதிக்க வேண்டாமா, அப்பா? 'இவன் இந்தச் சமயத்தில் எங்கே தொலைந்து விட்டான்' என்று எல்லோரும் முணுமுணுக்கிறார்கள்.

நிகிதா : [தன் கையை விடுவித்துக்கொண்டு :] தொந்தரவு பண்ணாதே!

அன்னு : உம்! சீக்கிரம்!

நிகிதா : [கயிற்றைச் சுழற்றி அடிக்கப்போவது போலப் பயமுறுத்துகிருன்.] போ, போ.

அன்னு : நான் போய் அம்மாவை வரச் சொல்லுகிறேன். [ஓடுகிருள்.]

நிகிதா : [எழுந்து உட்கார்ந்துகொண்டு:] அங்கே எப்படித் திரும்பிப் போவது? பரிசுத்தமான சிலுவையை எப்படி நான் கையால் தொடுவது? அவள் முகத்தில் எப்படி விழிப்பது? [மறுபடியும் படுத்துக் கொள்ளுகிருன்.] பூமி பிளந்தாலும் அதற்குள் குதித்து உயிரை விட்டுவிடலாம். அப்போது யாரும் என்னைக் காணமாட்டார்கள். நானும் யாரையும் பார்க்கமாட்டேன். [மீண்டும் எழுந்து உட்காருகிருன்.] மறுபடியும் வீட்டுக்குள் போகமாட்டேன். [கயிற்றை எடுத்து ஒரு சுருக்குப்போட்டு, தன் கழுத்தில் மாட்டிச் சரிபார்க்கிருன்.] உம்! அதுதான் வழி.

[மாத்ரோனு வருகிருள். நிகிதா, தன் தாயார் வருவதைக் கண்டு, தன் கழுத்தைச் சுற்றியுள்ள சுருக்கை விரைவாகக் கழற்றிவிட்டுப் படுத்துக் கொள்ளுகிருன்.]

மாத்ரோனு : [அவசரமாக:] நிகிதா, நிகிதா, என்னடா பேச்சில்லே? என்ன விசேஷம்? ரொம்பக் குடித்து விட்டாயா? எல்லோரும் உனக்காகக் காத்துக் காத்து அலுத்துப்போய் விட்டார்கள்.

நிகிதா : என்னை எத்தனை பாதகங்களுக்கு உள்ளாக்கி விட்டாய்? என்ன வாழ்க்கை இது?

மாத்ரோனு: அதைப் பற்றி இப்பொழுது என்ன? நீ வந்து அவர்களை ஆசீர்வாதம் பண்ணு. எத்தனை நேரம் உனக்காகக் காத்துக்கொண் டிருப்பது?

நிகிதா: நான் எப்படி அவர்களை ஆசீர்வதிப்பது?

மாத்ரோனு: இது தெரியாதா? வழக்கம் போலத்தான்.

நிகிதா: அது தெரியும் எனக்கு! யாரை நான் ஆசீர்வதிப்பது? அவளுக்கு நான் இவ்வளவு கொடிய பாதகம் இழைத்த பிறகுகூடவா!...............

மாத்ரோனு: அவளுக்கு நீ என்ன தீங்கிழைத்து விட்டாய்? அதைப்பற்றி யாருக்குத் தெரியும்? ஒரு உயிருக்குக்கூடத் தெரியாது. அவள்தான் கல்யாணத் துக்கு சம்மதித்து விட்டாளே!

நிகிதா: என்னது?

மாத்ரோனு: ஆமாம்! வேறு என்ன செய்ய முடியும்? அவள் அப்பொழுதே கவனமா யிருந் திருக்க வேண்டும். இப்பொழுது அவளால் மறுக்க இயலாது. மணமகனுடைய சுற்றத்தாரும் இனி மேல் ஒன்றும் சொல்ல வழியில்லை. அவளை அவர் கள் இரண்டுதரம் பார்த்தார்கள். அப்புறம் பணத் தையும் வாங்கிக்கொண்டு விட்டார்கள்.

நிகிதா: ஆமாம், நிலவறையில் என்ன இருக் கிறது?

மாத்ரோனு: [அலக்ஷியமாய் நகைத்துக் கொண்டு:] நிலவறையிலா? என், உருளைக்கிழங்கு,

முட்டைக் கோஸ், கத்தரிக்காய் முதலியவை போனதை எண்ணி ஏன் கலங்குகிருய்?

நிகிதா: அதை மறந்துவிட நான் தயார்தான். ஆனல், அந்த நினைவு என்னைவிட்டு அகன்ருல் தானே? எப்பொழுதும் என் மனம் அந்த நிலவறையைப் பற்றித்தான் எண்ணமிடுகிறது.

மாத்ரோனு: அந்தக் கதை யெல்லாம் இப் பொழுது யார் கேட்டது?

நிகிதா: உம்!......என்னைச் சித்திரவதை செய்யாதே!

மாத்ரோனு: நடப்பது நடந்துதான் ஆக வேண்டும். இப்பொழுதே, என்னவோ ஏதோ வென்று சந்தேகிக்கத் தொடங்கிவிட்டார்கள். இன்னும் காலந் தாழ்த்தினுயானல், ரகசியம் வெளியாகி விடும். நிமிர்ந்தாப்போல் நடந்தால் திருடனைக்கூடச் சந்தேகிக்க மாட்டார்கள். ஒளிந்து கொண்டால் தான் சந்தேகம் வலுக்கும். தைரியத்தைக் கைவிடாதே!

நிகிதா: நீங்கள் சரியானபடி எனக்கு வலை விரித்து அதில் மாட்டச்செய்து விட்டீர்கள்!

மாத்ரோனு: சரி, சரி. வா. வந்து அவர்களை ஆசீர்வதி. அப்புறம் உன்னை யார் தொந்தரவு செய்யப் போகிருர்கள்?

நிகிதா: என்னல் முடியாது.

மாத்ரோனு: [தனக்குத்தானே:] இவனுக் கென்ன வந்துவிட்டது? சற்று நேரத்துக்குமுன் சரியா யிருந்தான். யாரோ சூது செய்துவிட்டார்

கள். [வெளியே:] நிகிதா, இதோ அநிஸ்யா வருகிருள். அவளும் விருந்தினர்களை உபசரியாமல் உன்னைத் தேடிக் கிளம்பிவிட்டாள்!

[அநிஸ்யா புத்துடை அணிந்து குடியால் சிவந்த முகத்துடன் வருகிருள்.]

*அநிஸ்யா:* அம்மா, விருந்து எவ்வளவு ஜோர்? அவரெங்கே?

*மாத்ரோனு:* இங்கே வைக்கோலை விரித்துப் படுத்துக்கொண் டிருக்கிருன். வீட்டுக்கு வரமாட்டேன் என்கிருன்.

*நிகிதா:* [அநிஸ்யாவைப் பார்த்துக்கொண்டே தனக்குள்:] இவளோடு நான் வாழ்க்கை முழுவதும் வேண்டா வெறுப்பாய் வாழ வேண்டுமாம்! உம்! என்றைக்காவது இவளைக் கொன்றுதீர்த்து விடுவேன்! ஆனல், அதற்கப்புறம் நான் உயிரோடிருக்க முடியாது.

*அநிஸ்யா:* [சிரிக்கிருள்:] நானும் இங்கேயே உட்கார்ந்துகொண்டு விடுவேன். ஆனல் நேரமில்லை. வாருங்கள்; கையைப் பிடித்து அழைத்துச் செல்லுகிறேன். வீட்டில் வந்து பாருங்கள். பாட்டும் கூத்தும் இன்னும் ஓயவில்லை. எல்லோருக்கும் கொஞ்சம் கள் மயக்கம் தலைக்கேறி இருக்கிறது. வாருங்கள்! உங்களுக்காக எல்லோரும் காத்துக் கொண்டிருக்கிருர்கள்.

[கையைக் கொடுத்து, அவனைத் தூக்க முயலுகிருள். அவன் தன் கையை இழுத்துக் கொள்ளுகிருன்.]

நிகிதா: நீ போ. நான் அப்புறம் வருகிறேன்.

அநிஸ்யா: அதெல்லாம் உதவாது. எனக்கும் உங்களுக்கும் இடையே மனஸ்தாபத்தை உண்டாக்க அவள் வந்து சேர்ந்தாள். இப்பொழுதுதான் அவளைத் துரத்தியாகி விட்டதே! இனிமேல் நாமிருவரும் மகிழ்ச்சியோடு வாழ என்ன தடை? இனியேல் நமது வாழ்க்கை கண்ணியமா யிருக்கும். சட்டபூர்வமாகவுமிருக்கும். இப்பொழுது எனக்குள் மகிழ்ச்சி பொங்குகிறது. வெளியிட வார்த்தைகளில்லை. மறுபடியும் புதிதாக உங்களை மணஞ்செய்து கொள்வது போல எனக்குப் படுகிறது. ஜனங்கள் எல்லோருக்கும் இன்று சந்தோஷம். எல்லோரும் நமக்கு நன்றி செலுத்துகிறார்கள். சுற்றுப்புறத்தில் உள்ள பெரிய மனிதர்களெல்லோரும் நமது வீட்டில் இன்று கூடியிருக்கிறார்கள். வக்கீல் இவான் மோஸீச், போலீஸ் இன்ஸ்பெக்டர், எல்லோரும் வந்திருக்கிறார்கள். அவர்களும் கூடச்சேர்ந்து வாழ்த்துப் பாடினார்கள். நீங்கள் கேட்க வில்லையே?

நிகிதா: பின் ஏன் நீ இங்கு வந்தாய்? நீ அங்கேயே இருந்திருக்க வேண்டாமா?

அநிஸ்யா: ஆமாம். நான் உடனே திரும்பிப் போக வேண்டியதுதான்.

நிகிதா: [எழுந்து உடையில் ஒட்டிக்கொண்டிருக்கும் வைக்கோலை உதறுகிறான்.] நீ போ. நான் உன் பின்னாலே வந்துவிடுகிறேன்.

மாத்ரோனா: வாலிபப் பருவம், கிழவி சொன்னால் கேட்குமா? வயதுப் பெண் சொன்னால்தான்

கேட்கும். நான் போ, போ என்று கதறினேனே! கேட்டானு? தன் மனைவி சொன்னவுடன் புறப்பட்டு விட்டான்! [மாத்ரோனுவும் அநிஸ்யாவும், குடிசையை நோக்கி நடக்கிருர்கள்.] உம், புறப்படு!

நிகிதா: இதோ வந்துவிட்டேன்! ஆசீர்வதிக்க வேண்டிய சமயத்தில் நான் வந்துவிடுவேன். [மாத்ரோனுவும், அநிஸ்யாவும் திரும்பிப் பார்க்கிருர்கள்.] ஏன் நிற்கிறீர்கள்? போங்கள். [அவர்கள் மறைகிருர்கள். அவன் மறுபடியும் உட்கார்ந்து தனது பூட்ஸைக் கழற்றுகிருன்.] ஆமாம்! இவர்கள் கூப்பிட்டவுடன் நான் போய்விட வேண்டியது! அழகா யிருக்கிறதே! இன்னும் கொஞ்ச நேரம் கழித்து உத்திரத்தடியில் என்னைத் தேடிப் பார்க்கட்டும்! இதோ கயிறு! [கீழே தேடுகிருன்.] அவர்கள் திரும்பி விடுவார்களோ? [அநிஸ்யாவைக் கேலி செய்யும் பாவனையில்:] 'நானும் இங்கேயே உங்களோடு உட்கார்ந்து விடுவேன்; ஆனல், நேரமில்லை!' கழுதை! இப்போது நான் தனியா யிருக்கிறேன்; என்னை உத்திரத்திலிருந்து இறக்கிய பிறகு என்னேடு இங்கேயே உட்கார்ந்து கொண்டு அழு. அதுதான் சரி. [கயிற்றைக் கையிலெடுத்துக் கொள்ளுகிருன். ஆனல், அதன் மற்ரெரு நுனி எதிலோ சிக்கிக் கொண்டு விடுகிறது. குடிவெறியி லிருக்கும் மிட்ரிச் எழுந்து உட்கார்ந்து கயிற்றைப் பிடித்து இழுக்கிருன்.]

மிட்ரிச்: முடியாது. விடமுடியாது. நானே தான் வைக்கோல் கொண்டு வருவேன். இது யார்?

நிகிதாவா? [சிரிக்கிருன்.] நீங்களா வைக்கோல் எடுத்துப்போக வந்தீர்கள்?

நிகிதா: கயிற்றை விடு!

மிட்ரிக்: கொஞ்சம் பொறுங்கள்! என்னைத் தானே வைக்கோல் எடுத்துவர அனுப்பினீர்கள்? நானே கொண்டு வருகிறேன். [எழுந்து வைக்கோலைச் சேகரிக்க முயல்கிருன். ஆனுல், இடையே தள்ளாடிக் கீழே விழுந்து விடுகிருன்.]

மிட்ரிக்: ஆம்! என்னை வென்று விட்டது.

நிகிதா: கயிற்றை விடேன்!

மிட்ரிக்: நிகிதா, நீ ஒரு பன்றி. [சிரிக்கிருன்.] உம். நீ எனக்கு நண்பன்தான்; ஆனுல் நீ ஒரு முட்டாள். எனக்குக் குடிவெறி யென்று நினைக்கிருயோ? போடா, போ. உனக்குத்தான் குடிவெறி. என்னைப் பார். நான் யார் தெரியுமா? மாட்சிமை தங்கிய மஹாராணியவர்களின் முதல் மெய்காப்பாளர் படையின் தளபதியாக்கும்! நான் ஜார் சக்ரவர்த்திக்கும், தேசத்துக்கும் உண்மையான விசுவாசத்துடன் சேவை செய்திருக்கிறேன். நான் ஒரு போர் வீரனு? இல்லை. கேவலம் ஓர் அனுதை... உம்......நான் குடிப்பதே கிடையாது. உனக்குப் பயமா? கிடையாது. குடிக்க வேண்டுமென்று நினைத்தால் தொப்பியைக்கூட விற்றுக் குடித்துவிடுவேன். நான் குடிப்பதை நிறுத்திவிட எண்ணி, தளகர்த்தர் என்னைச் சவுக்கா லடித்ததுண்டு. அதற்கெல்லாம் பயந்தவனு நான்? முடியாது என்று சொல்லி விட்டேன். கொஞ்சநாள் குடிப்பதில்லை என்று விரத

மெடுத்துக்கொண்டு, கள்ளேயே தொடாதிருந்தேன். இப்பொழுது குடிக்கவேண்டும் என்று தோன்றி யது. குடித்தேன். என்னே யார் கேட்பது? மனி தனுக்கு மனிதன் என்ன பயம்? பயப்படுகிறவனேச் சாத்தான் இஷ்டப்படி ஆட்டிவைப்பான் என்று பாதிரி சொல்லியிருக்கிருர். எனக்கு மனிதர்களிடத் துப் பயமில்லே. எனவே, கஷ்டமுமில்லே. நான் இஷ்டப் பட்டபோது சாத்தான் முகத்தில் காறி உமிழ்ந்து விடுவேன். அவன் வேலே யெல்லாம் என்னிடம் பலிக்காது.

நிகிதா: [மிட்ரிக்கை வணங்குகிருன்.] உண்மை தான். அடடா, நான் என்ன செய்யத் துணிந்து விட்டேன்! [கயிற்றைக் கீழே விட்டெறிகிருன்.]

மிட்ரிக்: என்ன? நீர் செய்வது எனக்கு விளங்கவில்லேயே?

நிகிதா: [எழுந்து:] மனிதரது வம்பளப்புக்குப் பயப்படக் கூடாது என்றுதானே சொல்லுகிருய்?

மிட்ரிக்: எதற்காகப் பயப்பட வேண்டும்? நம்மைவிட எவ்விதத்தில் யார் உயர்ந்தவர்கள்? மனிதர்களுக்குள் வேறு என்ன வித்தியாசம்? ஒரு வனுக்குப் பெரிய தொந்தி, இன்ஞெருவனுக்குத் தொந்தியில்லே. இது தவிர, மனிதனுக்கு மனிதன் வேறு என்ன வித்தியாசம் இருக்கிறது? அவர் களுக்கு ஏன் பயப்பட வேண்டும்?

மாத்ரோஞ: [குடிசை வாயிலிருந்து உரக்க:] நிகிதா, ஏன் இவ்வளவு நேரம்?

நிகிதா: இதோ! வந்துவிட்டேன்.

[குடிசையை நோக்கி நடக்கிருன்.]

---

## இரண்டாங் காட்சி

[நிகிதாவின் குடிசை, உட்புறம். ஒரே கூட்டம். மேஜையைச் சுற்றியுள்ள நாற்காலி ஒன்றுகூடக் காலியில்லை. பலர் நின்றுகொண் டிருக்கிறார்கள். அகுலினாவும் மணமகனும், எல்லோருக்கும் நடுவில் இரு நாற்காலிகளில் அமர்ந்திருக்கிறார்கள். ஒரு சிறிய மேஜை மீது, சிலுவையில் அறையப்பட்ட கிறிஸ்துவின் சிலையொன்று இருக்கிறது. அதனருகே பெரிய ரொட்டித் துண்டு ஒன்று கிடக்கிறது. விருந்தாளிகளுள், மரீனா, அவள் கணவன், போலீஸ் அதிகாரி, ஒரு வண்டியோட்டி, மணத்தரகன் முதலியோர் இருக்கின்றனர். பெண்கள் பாடுகிறார்கள். அநிஸ்யா வாட்காவைப் பரிமாறுகிறாள். சற்று நேரத்திற்கப்புறம் பாட்டு நிற்கிறது.]

வண்டியோட்டி: கோவில் ரொம்பத் தூரத்திலிருக்கிறதே! இப்பொழுதே புறப்பட்டால்தான் நேரத்தோடு அங்கே போய்ச் சேரலாம்.

மணத்தரகன்: பெண்ணின் தந்தை இன்னும் ஆசீர்வாதம் செய்யவில்லையே! ஏன் இன்னும் வரவில்லை அவர்?

அநிஸ்யா: இதோ வந்துவிட்டார். நீங்களெல்லோரும் இன்னும் கொஞ்சம் வாட்காக் குடியுங்கள். மறுக்கக் கூடாது.

மனத்நரகன்: எவ்வளவு நேரம் காத்துக் கொண்டிருப்பது?

அநிஸ்யா: ஒரு நிமிஷத்திற்குள் வந்துவிடுவார். [எல்லோருக்கும் வாட்கா கொடுக்கிருள்.] பாட்டை என் நிறுத்தி விட்டீர்கள்? அவர் வருகிற வரையில் பாடுங்கள்.

வண்டியோட்டி: தெரிந்ததையெல்லாம் பாடி முடித்துவிட்டார்கள் போலிருக்கிறது. எவ்வளவு நேரமாகப் பாடுகிருர்கள்!

[மறுபடியும் பாடுகிருர்கள். அவர்கள் பாடி முடிக்கப் போகும் தருணத்தில், நிகிதாவும் அகிமும் வருகிருர்கள்.]

நிகிதா: [தன் தந்தையின் கையைப் பிடித்திழுத்து முன்னே தள்ளுகிருன்.] போங்கள். நீங்களில்லாமல் என்னுல் முடியாது.

அகிம்: எனக்கென்ன?

நிகிதா: [பாடும் பெண்களைப் பார்த்து:] போதும். சத்தம் வேண்டாம். [உட்கார்ந்திருப்பவர்கள் எல்லோரையும் பார்க்கிருன்.] மரீனு, நீயும் இங்குத்தான் இருக்கிருயா?

மனத்நரகன்: சிலுவையை எடுத்துக்கொண்டு அவர்களை அணுகி ஆசீர்வாதம் செய்யுங்கள்.

நிகிதா: கொஞ்சம் பொறுங்கள்! [அகுலினவைப் பார்த்து:] அகுலினு நீயும் இங்கேதான் இருக்கிருயா?

மனத்தரகன்: எதற்காக எல்லோரையும் 'இங்கே தான் இருக்கிருயா?' என்று கேட்கிறீர்கள்? வேறு எங்கிருப்பாள் அகுலினு? இது என்ன வேடிக்கை?

அநிஸ்யா: இவர் ஏன் வெறுங்காலோடிருக்கிருர்! பூட்ஸ் எங்கே?

நிகிதா: அப்பா, நீங்களும் இருக்கிறீர்கள். இங்கிருப்போர் எல்லாம் கிறிஸ்துநாதரின் திருக்கூட்டத்தார். இதோ நான்...... [மண்டியிடுகிருன்.]

அநிஸ்யா: இது என்ன வேலை?.........என்ன செய்கிறீர்கள்?

மாத்ரோனு: முன்னுலேயே சொல்லவில்லையா நான்? அதிக வீரமுள்ள பிரெஞ்சு ஒயினைக் குடித்ததன் விளைவு இது. நிகிதா, என்ன செய்கிருய் நீ?

[எல்லோரும் அவனைத் தூக்கிவிட முயலுகிருர்கள். அவன் அவர்களை லட்சியம் செய்யாமல், நேரே முன்னுலே பார்க்கிருன்.]

நிகிதா: கிறிஸ்துநாதரின் அடியார்களே, நான் ஒரு மகா பாபி. நான் செய்த பாவத்துக்காக மனம் வருந்தி, உங்கள் முன்னிலையில் உண்மையனைத்தையும் சொல்லிவிடப் போகிறேன்.

மாத்ரோனு: [அவனது தோளைப்பிடித்து உலுக்குகிருள்.] உம்! நிகிதா, உனக்கென்ன பைத்

தியமா? நண்பர்களே! அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. சட்டென்று அப்புறப்படுத்த வேண்டும்.

நிகிதா: [அவளைத் தூரத் தள்ளிவிடுகிறான்.] சும்மா கிட. அப்பா, நான் சொல்லுவதைக் கேளுங் கள். மரீனா, இதோ பார். [அவள் முன்னிலையில் குனிந்து வணங்கி எழுகிறான்.] உனக்குத் தீங்கி ழைத்து விட்டேன். உன்னை மணஞ்செய்து கொள் வதாகச் சொல்லி ஏமாற்றி, உன் இளமை நலத்தைக் கெடுத்த பின், உன்னைக் கைவிட்டுவிட்டேன். கிறிஸ் துவின் முன்னிலையில், கிறிஸ்துவின் பெயரால் என்னை மன்னித்துவிடு. [மறுபடியும் அவளுக்கு வணக்கம் செய்கிறான்.]

அநிஸ்யா: ஏன் இப்படி உளறுகிறீர்கள்? இது கண்ணியமா? இதையெல்லாம் யார் கேட்டார்கள்? எழுந்திருங்கள். போதும் இந்த உளறலெல்லாம்.

மாத்ரோனா: எழுந்திரு நிகிதா, புத்தியில்லாமல் உளருதே! [அவனை இழுக்கிறாள்.]

நிகிதா: [முடியாது என்பதற் கறிகுறியாகத் தலையை ஆட்டுகிறான்.] என்னைத் தொடாதே! மரீனா, நான் உனக்கிழைத்த பாவத்தைக் கிறிஸ்துவின் முன் னிலையில் மன்னித்துவிடு! [மரீனா தன் முகத்தை இரு கைகளாலும் மூடிக்கொண்டு மௌனமாயிருக் கிறாள்.]

அநிஸ்யா: போதும்! சொன்னதைக் கேளுங் கள்! மானமில்லையா, இதை எல்லாம் வெளியே சொல்ல?...இவருக்குப் புத்தி சுவாதீனமில்லை.

நிகிதா : [அநிஸ்யாவைத் தள்ளிவிட்டு, அகுலிஞவிடம் திரும்புகிறுன்.] அகுலிஞ, கிறிஸ்துவின் அடியார்களே, எல்லோரும் நான் சொல்வதைக் கேளுங்கள் ! நான் ஒரு மிருகம். அகுலிஞ, உனக்கும் நான் தீங்கிழைத்துவிட்டேன் ! உன் தகப்பஞர் யதேச்சையாக இறக்கவில்லை. விஷத்தினுல் இறந்தார்.

அநிஸ்யா : [கூச்சலிட்டு:] இது என்ன ? இப்படி ஆரம்பித்துவிட்டாரே ?

மாத்ரோஞ : அவனுக்குச் சுய உணர்வில்லை. அப்புறப்படுத்துங்கள்.

[பலர் அவனைப் பிடிக்க வருகிறுர்கள்.]

அகிம் : [அவர்களை விலகி நிற்கும்படி சைகை செய்கிறுன்.] சற்றுப் பொறுங்கள் !

நிகிதா : அகுலிஞ, நானே அவருக்கு விஷங் கொடுத்தேன். என்னை மன்னித்துவிடு. கிறிஸ்துவுக்காக என்னை மன்னித்துவிடு.

அகுலிஞ : [திடுக்கிட்டு எழுகிறுள்.] நீ சொல்லுவது பொய். யார் விஷங் கொடுத்தது என்பதை நான் அறிவேன் !

நிகிதா : இல்லை. நான்தான் விஷங் கொடுத்தது. கிறிஸ்துவுக்காக என்னை மன்னிக்கவேண்டும் !

அகிம் : ஐயோ தெய்வமே ! எத்தனை பாவங்கள், எத்தனை பாவங்கள் !

போலீஸ் அதிகாரி : அவனைப் பிடியுங்கள் ! நாட்டாண்மைக்காரரை அழைத்துவரச் சொல்லுங்

கள்! ஒரு வாக்குமூலம் வாங்கிச் சாட்சிகளையும் கையெழுத்திடச் செய்யவேண்டும்! ஏய், நிகிதா, எழுந்திரு. இங்கே வா.

அகிம்: [போலீஸ் அதிகாரியிடம்:] ஏ காக்கிச் சட்டை! கொஞ்சம் பேசாமலிரு, அவன் சொல்லி முடிக்கட்டும்.

போலீஸ் அதிகாரி: ஏ கிழவா! நீ குறுக்கே பேசாதே! நான் வாக்குமூலத்தை எழுதிக் கொள்ள வேண்டும்.

அகிம்: உம்! என்ன ஆளப்பா நீ! கடவுள் சன்னிதானத்தில் அவன் தன் பாவத்தைச் சொல்லி மன்னிப்புக் கேட்கிறான்! அதற்கு இடைஞ்சல் உண்டுபண்ணாதே. என்ன நான் சொல்வது! உங்கள் வாக்குமூலத்தை அப்புறம் எழுதிக்கொள்ளலாம்.

போலீஸ்: நாட்டாண்மைக்காரரை யாராவது போய் அழைத்து வாருங்கள்!

அகிம்: நிகிதா, உம்! உன் வேலையைப் பார்.

நிகிதா: அகுலினா, உனக்கு நானிழைத்த தவறு மிகப் பெரியது. உன் கற்பை அழித்தேன்! கிறிஸ்துவுக்காக என்னை மன்னித்துவிடு. [அவளை வணங்குகிறான்.]

அகுலினா: [எழுந்து:] மணஞ் செய்துகொள் என்று என்னை அவர் சொன்னதாலேயே நான் இந்தக் கலியாணத்துக்கு உடன்பட்டேன். இனி மேல் எனக்குக் கலியாணம் வேண்டாம்!

போலீஸ்: இன்னொரு தடவை சொல். நான் எழுதிக்கொள்ளுகிறேன்.

நிகிதா : கொஞ்சம் பொறுங்கள். நான் இதோ முடித்து விடுகிறேன் !

அகிம் : [மிகுந்த மகிழ்ச்சியோடு :] நிகிதா, எல்லாவற்றையும் சொல்லிவிடு ! மனிதனிடமல்ல, கடவுளிடம் ! ஆம், அவரிடம் ! அதனாலே உனக்குச் சாந்தியுண்டு.

நிகிதா : அவள் தந்தையும், என் எஜமானரு மான பீட்டருக்கு நஞ்சு கொடுத்துக் கொன்றவன் நான்தான். நன்றியற்ற கொலைபாதகன் நான். அகுலினா என் ஆதிக்கத்தி லிருந்ததனால், அவளைக் கெடுத்து, அவள் குழந்தையையும் கொன்றுவிட்டேன் !

அகுலினா : ஆமாம் ! உண்மை, உண்மை.

நிகிதா : குழந்தையை நிலவறைக்குள் வைத்து ஒரு பலகையால் அமுக்கிக் கொன்றுவிட்டேன். ஆமாம். குழந்தையைக் கீழே கிடத்தி, பலகையை அதன்மேல் போட்டு, பலகைமேல் ஏறி உட்கார்ந்தேன். எலும்புகள் ‘நெறு நெறு’ என்று நொறுங்கி விட்டன. [அழுகிறான்.] நானே அங்கேயே, அதைப் புதைத்து விட்டேன். இந்தக் கொலையில் வேறு யாருக்கும் சம்பந்தமில்லை !

அகுலினா : புத்தி ஸ்வாதீனமில்லாமல், தானே செய்ததாகச் சொல்லுகிறார். நான்தான் அவரை....

நிகிதா : அகுலினா, என்னை இக் குற்றங்களி லிருந்து காப்பாற்ற முயலாதே ! நான் யாருக்கும் பயப்படவில்லை. கிறிஸ்துவின் அடியார்களே,

என்னை மன்னியுங்கள்! [எல்லோரையும் வணங்குகிறான்.]

[மௌனம்]

போலீஸ் அதிகாரி: அவனைப் பிடித்துக் கட்டுங்கள்! இந்த விவாகம் இனி நடைபெறாது!

[சிலர் பெல்டுகளைக் கொண்டு நிகிதாவைக் கட்ட வருகின்றனர்.]

நிகிதா: பொறுங்கள், இன்னும் நேரமிருக்கிறதே! [தன் தந்தையின் முன்னிலையில் குனிந்து வணங்குகிறான்.] அப்பா, அப்பா, நீங்களும் என்னை மன்னிக்க வேண்டும்! நான் ஒரு பேயன். நீங்கள் முன்னால் அடிக்கடி சொல்வதுண்டல்லவா, 'ஒரு சிறு விரல் வலையில் அகப்பட்டுக் கொண்டாலும், பறவையின் உயிருக்கே ஆபத்து' என்று? அதற்கு நான் செவி சாய்த்ததே யில்லை! கிறிஸ்துவுக்காக இப்போது என்னை மன்னியுங்கள்.

அகிம்: [அடங்கா மகிழ்ச்சியோடு:] கடவுள் உன்னை மன்னிப்பார். இப்பொழுதுதான் நீ என் அருமைப் புதல்வனானாய்! [தழுவுகிறான்.] நீ உன் குற்றத்தை வெளியிடத் தயங்கவில்லை. கடவுள் எல்லோரிடத்தும் இரக்கமுடையவர்! அவர் செயல்!

[நாட்டாண்மைக்காரர் வருகிறார்.]

நாட்டாண்மை: சாட்சிகள் இருக்கிறார்களா?

போலீஸ்: இப்பொழுதே, முதல் விசாரணையை முடித்து விடலாமே?

[நிகிதாவைக் கட்டுகிறார்கள்.]

அருவினு: [அவனருகே போய், கண்ணீர் தேங்கிய கண்களுடன் நிற்கிருள்.] சொல்ல விடை கொடு, நான் உண்மையைச் சொல்லி விடுகிறேன்.

நிகிதா: ஒன்றும் தேவையில்லை. எல்லாப் பாவங்களுக்கும் நான்தான் பொறுப்பு. திட்டம் போட்டதும் நான்தான், நிறைவேற்றியதும் நான் தான். என்னை என்ன வேண்டுமானுலும் செய்யுங் கள். இதற்குமேல் நான் ஒன்றும் சொல்லப்போவ தில்லை.

ஐந்தாம் அங்கம் முற்றும்.

இருளின் வலிமை முற்றும்.

---

# சக்தி மலர்

சக்தி மலர்ப் பதிப்பு நூல்கள் தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டுக்கும் ஏற்ற உயரிய நற்கருத்துக்களைத் தெளிவான எளிய நடையில் வெளியிட எழுந்தனவாகும்

அநிஸ்யா என்ற குடியானப் பெண் தன் கணவனை வஞ்சித்துக் கொன்றுவிட்டுத், தன்னுடன் . தகா நட்புக் கொண்டிருந்த நிகிதா என்ற பண்ணையாளை மணக்கின்றுள். அநிஸ்யாவின் சக்களத்தி மகள் நிகிதாவுடன் கூடிப் பெற்ற சிசுவை இவர்கள் இருவரும் கொடுங்கொலை புரிகின்றனர். காரணம் இருளின் வலிமைதான். இறுதியில் நன்மையே தீமையை வெல்லுகிறது

சக்தி காரியாலயம்

காரைக்குடி — மதுரை